# செந்தமிழ்ச் செல்வி



உள்ளுறை




சிலம்பு-௫௬] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௩, மாசி March '82 [பரல்-௭

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு ருகூ | திருவள்ளுவர் ஆண்டு உ0கக, மாசி மார்ச் 1982 | பரல் எ |
|---|---|---|

# தமிழகப் பல்கலைக்கழகங்களில் திருக்குறள் ஆய்வுத்துறைகள்

பேரறிஞர் அண்ணு அவர்கள் முதல் அமைச்சராக இருந்த போது தமிழ்நாட்டின் தலைநகரில் 1967இல் நடைபெற்ற இரண்டாவது உலகத்தமிழ் மாநாடு மிகச் சீரும்சிறப்புமாக நடைபெற்றது. மாநாட்டின்மூலம் வரப்பெற்ற வரவுத்தொகையில் செலவுபோக எஞ்சியிருந்த தொகையில் சென்னைப்பல்கலைக்கழகம், அண்ணுமலைப்பல்கலைக்கழகம், மதுரைப்பல்கலைக்கழகம் ஆகிய மூன்றிலும் திருக்குறள் ஆராய்ச்சித்துறைகளைத் தொடங்கும் பொருட்டுத் தனித்தனி மூன்றுநூருயிர ரூபா (ரூ 3,00,000) வழங்கப்பெற்றதை அன்பர்கள் அறிவர்.

இம் மூன்று பல்கலைக்கழகங்களும் தொடர்ந்து திருக்குறள் பற்றிய ஆய்வு நூல்களைத் தமிழிலேயே வெளியிட்டு வருகின்றன. ஆனுல், 'திருக்குறளை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்' என்னும் கருத்து அதனுல் நிறைவேறுதற்குரிய வழி ஏற்பட்டதா எனில், இல்லையென்றே சொல்லவேண்டும். எனவே தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மூன்று திரவிட மொழிகளிலும் அம் மூன்று பல்கலைக்கழகங்களும் திருக்குறள் ஆய்வு நூல்களை முதற்கண் வெளியிடுவது நலமாகும். திருக்குறள் மொழிபெயர்ப்பு எந்த மொழியில் செய்யப்பட்டிருப்பினும் அந்த மொழி பேசும் மக்களிடையே அதன் சீரிய கருத்துகள் முழுதும் பரவிடும் என்று சொல்வதற்கில்லை.

தமிழ்மொழியில் தோன்றிய திருக்குறள், தமிழ்நாட்டிலேயே எந்த அளவுக்குப் பரவியுள்ளது என்பதை எண்ணிப்பார்க்கும் போது பிறமொழிகளில் மொழிபெயர்ப்பளவிலே இருக்கக்கூடிய திருக்குறள் நூல் அவ்வம் மொழியாளர்களிடம் எங்ஙனம் பரவும் என்பது கருதற்பாலது. இதனைக் கருத்தில்கொண்டு திருக் குறளைப் பரப்பும் முயற்சியில் மேலும் புதிய முயற்சிகளை நாம் மேற்கொள்ளுதல் வேண்டும் என்பது தெளிவாகும். தமிழக அரசில் திருக்குறளைப் பரப்புவதற்கென்று தனியாகத் துறை ஒன்று அமைதல் வேண்டும்.

திருக்குறள் இதுவரை எந்தெந்த மொழிகளில் மொழி பெயர்க்கப்பெற்றுள்ளன என்பதை முதலில் தொகுத்தல் வேண்டும். பிறமொழிகளில் மொழிபெயர்ப்புகளை வெளியிட முயலவேண்டும். இம் முயற்சிக்குப் பல்வேறு நாடுகளிலுள்ள அரசுத் தூதரகங்களை நாடலாம். எப்போதும் எல்லா மொழி பெயர்ப்பும் விற்பனைக்குக் கிடைக்கக்கூடிய வகையில் செய்தல் வேண்டும். எடுத்துக்காட்டாகத் திருக்குறள் இலத்தீன் மொழி யில் 1856 இல் மொழிபெயர்க்கப்பெற்றது. நூற்றாண்டுகட்கு முன்னர் வெளிவந்த இம் மொழிபெயர்ப்பு இப்போது விற்பனைக்குக் கிடைப்பதில்லை. அதுபோலவே திருக்குறள் இந்திய மொழி களில்கூட முழுமையாக எப்போதும் கிடைப்பதில்லை. குறள் கன்னடமொழியில் இன்னும் முழுமையாக மொழிபெயர்க்கப் பெறவில்லை. மலையாள மொழிபெயர்ப்புங்கூட விற்பனைக்குக் கிடைப்பதில்லை. எனவே எல்லா மொழிபெயர்ப்புகளும் எப் போதும் கிடைப்பதற்கு அரசுத்துறைதான் ஏற்பாடு செய்தல் வேண்டும்.

பிறநாடுகளில் பிறமொழி ஒலிபரப்பு நிலையங்கள்வழியும் அந்தந்த நாட்டு மொழிகளில் திருக்குறள் ஒலிபரப்பப்பெறுதல் வேண்டும். தமிழ்நாட்டிலே காலையிலே வானொலிவழிக் 'குறளமுதம்' கேட்டின்புறுவதுபோல், பிறமாநிலங்களில் அவ்வம் மாநில மக்களுக்கு அவரவர் மொழிகளில் இது கிடைக்கப் பெறுதல் வேண்டும். அவ்வம்மாநிலப் பாடநூல்களிலே திருக்குறளும் இடம்பெறுதல் வேண்டும். திருவள்ளுவர் மன்றங் களைப் பரவலாகத் தோற்றுவித்தல் வேண்டும்.

மேலே கூறியவாறு பிறமாநிலங்களிலும் திருக்குறள் பரவு வதற்கு முதற்கண் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தெலுங்கு மொழியிலும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் கன்னடமொழியி லும், மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் மலையாள மொழியி லும் திருக்குறள் ஆய்வு நடைபெறுதற்கு ஏற்பவும் வகை செய்தல்

வேண்டும். அவற்றிற்கேற்பத் தகுதிவாய்ந்த இருமொழிப் புலமையுடையவர்கள் இருவரையோ மூவரையோ தேர்ந்தெடுத்து அமர்த்துதல் வேண்டும். அவ்வம்மொழிகளில் விளக்க உரைகள் வெளிவருதல் வேண்டும். மூலமும் உரையும் கிடைத்தால்தான் குறளை மக்கள் நன்கு புரிந்துகொள்வர். அவ்வாராய்ச்சித் துறைக்கு மூன்றுநூறாயிர ரூபா போதாவிடில், கூடுதலான தொகையினைத் தமிழக அரசு வழங்குதல் வேண்டும். இந்த முறை வெற்றிபெற நடைபெறுவதைக் கண்காணிப்பதற்கு மேற்பார்வைக் குழு ஒன்றும் தமிழகவரசால் நிறுவப்பெறுதல் நன்றாம். அதனைத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்திலே ஒப்புவிக்கலாம்.

இந்தத் திட்டத்தில் வெற்றிகண்ட பிறகு, இந்தியநாட்டுப் பிறமொழிகளில் மூன்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம். பின்னர் இவ்வாறே மற்றை உலகமொழிகளையும் எடுத்துக் கொள்ளலாம்.

உரை நடை, வினா விடை, கதை, கட்டுரை, நாடகம் முதலிய வகையில் திருக்குறளும் அதன் கருத்துகளும் மேலே குறிப்பிட்ட மூன்று திரவிடமொழிகளிலும் முதற்கண் வெளியிடப்பெறுதல் வேண்டும். பொதுநெறி புகட்டும் திருக்குறள் உலகெலாம் பரவுதலைமட்டும் கருதவேண்டுமே அல்லாமல் அம் முயற்சியில் மொழிவேறுபாட்டையோ இனவேறுபாட்டையோ எவ்வகை யாலும் கருதுதல் கூடாது. கிறித்தவ சமயப்பரப்பாளர் தம் விவிலியநூலை (Bible) எவ்வாறு பரப்பியுள்ளனர்? அவ்வந்நாட்டு மொழிபயின்றனர்; அம்மொழி வல்லாரைத் தலைக்கூடி ஆய்ந்தனர்; அவ்வந்நாட்டு மொழியில் ஆக்கினர். தாமே அடித்தொண்டருள் தொண்டராய் அயராது உழைத்து உலகப் பொதுப் பொருளாய் வழங்கினர். அதைப்போலவே குறளைப் பரப்புவதற்கும் தமிழக அரசு உலகெங்கணும் குறள் பரப்புநரை அனுப்புதல் வேண்டும். அல்லது அவ்வந்நாடுகளிலுள்ளவர்களையும் பயன்படுத்திக் கொள்ளலாம். திருக்குறள் 'உலகப்பொதுமறை' என்பது உலகம் அறிந்த செய்தி. சமயங் கடந்த அதன் பொதுமையால் எச்சமயத் தாரும் விரும்பி ஏற்றுப்போற்றும் பெருமையைப் பெற்றிருப் பதுடன், பிற சமயப் பரப்புநர்களும் இதில் பெரிதும் ஈடுபாடு கொள்ளும் பெற்றியது.

எனவே உலகப்பொது நூலாகும் தனித்தன்மை தமிழ்த் திருக்குறளுக்கு உண்டு என்பது வெளிப்படை. இதனையுணர்ந்து தமிழக அரசும், தமிழகப் பல்கலைக்கழகங்களும், தமிழறிஞர்களும் தமிழார்வலர்களும் காலந் தாழ்க்காமல் முயலவேண்டும். இது

தமிழர் புகழ் கருதியவொன்று என்னும் அளவில் அமைவதன்று. உலகநலங் கருதியவொன்று என்பதே உண்மையாம்.

தமிழ் அறிஞர்பெருமக்களும், ஆங்கில அறிஞர்பெருமக்களும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தியற்றிய திருக்குறள் நூல்கள் பல வெளிவந்திருக்கின்றன. அஃதேபோல் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளிலும் வல்ல அறிஞர் பெருமக்கள் தத்தம் தாய்மொழிகளில் மொழிபெயர்ப்பின் அங்கெலாம் இயல்பாகத் திருக்குறள் பரவும். அதற்குத் தமிழக அரசும், பல்கலைக்கழகங்களும், அறிஞர்பெருமக்களும், உரிய பணிகளைச் செய்தால் திருக்குறள் உலகப்புகழ் எய்தும். உலகோர் வாழ்வும் சிறக்கும். 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்னும் பாரதியார் வாக்கும் மெய்யாகும். அவ்வகைப்பணியும் திருக்குறள் பரவுவதற்கு இன்றியமையாது வேண்டற்பாலதாகும். அதனால் திருக்குறளின் பொருட்சிறப்பும், விளக்கமும் தெளிவுபெறும் என்பது உறுதி.

இவ்வாறு பலவழிகளில் திருக்குறள் பரப்பும் பணியினைச் செய்வதற்கு வள்ளுவர் கோட்டத்தில் தலைமை நிலையமொன்றை அரசு நிறுவுதல் சாலப்பொருத்தமுடையதாகும். குறளைப் பரப்பும் நோக்கத்துடன் செயலாற்றும் சங்கங்களையும் தொண்டர்களையும் இதன்வழி ஒருங்கிணைத்துக்கொண்டு திருக்குறள் நெறி உலகெங்கும் பரவும்வகை காண்போமாக.

———

## வேண்டுகோள்

திருக்குறள் பெயரிலோ திருவள்ளுவர் பெயரிலோ தமிழ்நாட்டிலும், பிற மாநிலங்களிலும், தமிழ்மக்கள் வாழும் பிற நாடுகளிலும் நடைபெற்றுவரும் மன்றங்கள், கழகங்கள், நிலையங்கள் ஆகியவற்றின் முகவரிகளையும் வரலாற்றுக் குறிப்புகளையும் பெற விரும்புகிறோம். நன்றி.

அன்புள்ள

91, பவளக்காரத் தெரு,
சென்னை-600 001.

வ. சுப்பையா
கழக ஆட்சியர்

# ஜவுளி (சவளி)

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

பெருநகரங்களில் எல்லாம் வண்ண வண்ண எழுத்துகளில் 'ஜவுளிக்'கடைகள் காணப்பெறுகின்றன. உள்ளே இருக்கும் வண்ணத் துணிகளையெல்லாம் வெளிப்படுத்திக் காட்டுவதுபோல், பட்டொளி செய்யும் பலவண்ண மின்விளக்குகள் இலங்குகின்றன. ஆனால், 'ஜவுளி' என்பதோ, பெயர்ப்பலகையில் மொழிக் கொலைக்கு முன்னோடியாய் இருக்கின்றது!

வணிகப் பெருமக்கள் உள்ளம் வண்டமிழ்ப் பக்கம் சார வில்லையே என்ற வருத்தத்தால் பாவேந்தர்,

*'தமிழகத்தின் தமிழ்த்தெருவில் தமிழ்தான் இல்லை'*

என்றார். 'உரிமம்' பெறுதற்குக் கட்டாயமாகத் தமிழிலும் விளம்பரப் பலகை இருக்கவேண்டும் என்று, அரசு ஆணை பிறப்பித்தபின், வேண்டாவெறுப்பாய் ஓரஞ் சாரங்களில் ஒட்டுக்குடித்தனம்போல் வைக்கப்பெற்ற தமிழ் விளம்பரப் பலகையிலேயாவது பிழை யில்லாத் தமிழ் இருக்கச்செய்ய, எண்ணம் வரக்கூடாதா?

ஆங்கிலத்திலே பலகை எழுத வேண்டுமானால் அதில் தெளி வுடையவர்களிடம் கேட்டு எழுதுகின்றனர். பிழை ஏற்பட்டுவிடு மானால் நாணுகின்றனர்! ஆனால் தமிழைக் கெடுப்பதற்கு மட்டும் மொத்தக் குத்தகை எடுத்தவர்கள்போல் தாமும் அறியாமல் அறிந்தவரிடமும் கேளாமல் தவறாமல் பிழை செய்கின்றனர்! தமிழ்த்தாய் பெற்ற பிள்ளைகளுக்கு அவளை இழிவு செய்வதற்கு உரிமை இல்லையா என்ன?

'பாலாடையோ நூலாடையோ' என்று ஐயுறுமாறு ஆடை நெய்தார்களாம்! புகைபோலவும் நுரைபோலவும் பாம்பின் உரி போலவும் ஆடை இருந்ததாம்! மூங்கிலின் உள்ளே உள்ள வெண்படலம் போலவும் ஆடை இருந்ததாம்! அத்தகைய நாகரிகம் வளர்ந்த நாட்டிலே, அவற்றை விற்கும் கடைக்கு ஒரு பெயர் இல்லாமலா போயிற்று? மடிமடியாக அடுக்கிவைத்து நறுமணம் ஊட்டப்பெற்ற கடைகளே நிரம்பிய வீதியே மதுரையில் இருந்ததாமே!

*''நூலினும் மயிரினும் நுழைநூற் பட்டினும்*
*பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து*
*நறுமடி செறிந்த அறுவை வீதி''*

நீர், முட்டி மோதி அலைத்துக் குலைத்து அள்ளிவந்து போடப் பெற்ற மண் ‘சவடு’ என்று வழங்கப் பெறுவதும், அச் சவட்டுமண், பானை முதலியவை செய்தற்கும், செங்கல் ஆக்குவதற்கும் பயன்படுதல் யாவரும் அறிந்ததே. சவட்டுமண் கொண்டு மிதித்து நைத்துப் பானை வனைவாரைச் ‘சவளைக் காரர்’ என்பதும் வழக்கே. அன்றிப், பஞ்சு நூலைப் பாவில் இட்டு அடித்துப் பசை யேற்றித் துணி நெய்வாரைச் சில பகுதிகளில் ‘சவளைக் காரர்’ என்பதும் அறியத் தக்கதே. பொன்னை உருக்கி ஒழுகவிட்டுக் கம்பியாக இழுத்துப் பின்னல் வேலை செய்யும் ஓர் அணிக்குச் ‘சவடி’ என்னும் பெயருண்மை வெளிப்படையே.

நெருப்பிலிட்டு ஒன்றை வாட்டச் ‘சவளை’யாகும்—(துவளும்) என்றும், நோயடிப்பட்டு நொய்ந்த பிள்ளை ‘சவளை’ (சவலை) என்றும், சவ்வுச் சவ்வென வளைவதைச் ‘சவால்’ என்றும், சவளும் வளாரையுடைய புளியமரத்தைச் ‘சவளமரம்’ என்றும், வளைந்த காலுடையவனைச் ‘சவளன்’ என்றும், மிதித்துமிதித்துச் செலுத்தும் மிதிவண்டியைச் சில இடங்களில் ‘சவட்டு வண்டி’ என்றும், கடலினை அடுத்து முகவாயிற் கிடக்கும் கருங்குறு மணலைச் ‘சவளை’ என்றும், தோணி செலுத்துங் கோலைச் ‘சவளைக் கோல்’ (துடுப்பு) என்றும் வழங்கும் வழக்காறுகள் யாவும் நோக்கத் தக்கன.

இனிப் பருத்திக்குப் ‘பன்னல்’ என்றொரு பெயர் உண்டு என்பதை இலக்கியவழி அறியலாம்.

‘பன்னல் வேலிப் பணைநல் லூரே’

என்பது புறப்பாட்டு (345). பன்னல் வேலி இன்னது என விளக்குவது போலப் ‘பருத்தி வேலி’ என்றும் புறப்பாடல்கள் (299, 324) கூறும். பன்னல் தரும் பஞ்சியும் நூலும் பனுவல் எனப் பெற்றன. ‘பஞ்சி தன்சொல்லாப் பனுவல் இழையாக’ என்று ஆடைநூல்போல, ஆய்வு நூலை உருவகித் துரைத்ததும் வழக்காயது.

சவளி என்பது, பன்னல் என்பதுபோல் பருத்திக்குரிய பெயர்களுள் ஒன்று என்பதை, மருத்துவக் கலைச் சொல், விளக்கம் செய்கின்றது. பருத்தி இலையை நைத்து எடுக்கப்பெற்ற சாற்றைச் ‘சவளை’ என்பதும் மருத்துவ நூலோர் வழக்கே! சவளி யாம் பருத்தியினின்று எடுத்த பஞ்சி நூலால் செய்யப்பெற்றதும், சவட்டிச் சவட்டிப் பணி செய்யப்பெற்று உண்டாயதும் ஆகிய ஒன்றைப் பொருள் பொருந்தச் ‘சவளி’ என்று முந்தையோர் பெயரிட்டனர். அச் சவளிப் பெயரைச் ‘சவுளி’யாக்கி, அதன் பின்னர் ‘ஜவுளி’யாக்கிப் பண்டமாற்று வேலை செய்யப் பழகிப் போன பெருமக்கள், எழுத்துமாற்று வேலையைத் தொடர்ந்து,

நோக்கிய இடத்தெல்லாம் நீக்கமறச் செய்து வருகின்றனர். தமிழ் உணர்வுடைய—தெளிவுடைய சிலர் 'சவளிக்கடை' எனத் திருத்தி வாடிக்கையாக்கிவிட்டால், அதனைப் பார்த்தேனும் ஒருவர் ஒருவராய் உண்மை உணர்ந்து எங்கும் 'சவளிக்கடை'களாய்க் காண வாய்க்கும்.

துணி எப்படிச் சவட்டப்படுகிறது என்று விளக்கவேண்டியது இல்லை!

''பஞ்சுநேர் உலகப் பாட்டிலே மெலிந்த பாவியேன்''

''யான்படும் பாடு பஞ்சுதான் படுமோ?''

என்பன பட்டறிவால் சொல்லிய பருவரல் மொழிகள்.

பஞ்சு படும்பாடு படாப்பாடுதானே! மணையில் இட்டுக் கொட்டை பிரித்தெடுத்த பஞ்சு வில்லால் புடைக்கப்பட்டு, பட்டையாய் உருட்டப்பட்டு, நூலாய் இழைக்கப்பட்டு, நூலைப் பாவாய் இழுக்கப்பட்டு, பசையூட்டப்பட்டு, மொத்தும் அடியும் தரப்பட்டு, மிதிபட்டு, அடிபட்டு நெய்யப்பட்டுப், பின்னும் பின்னும் அழுக்குப்போக அறைபட்டு நைபட்டு—எத்தனை 'பட்டுப் பட்டாய்க்' கிழிபட்டுப் போகின்றது! சவட்டப் பெற வில்லையா, எத்துணையோ வகைகளில், நிலைகளில்? அதனைச் 'சவளி' என்பது சரிதானே!

———

## முதன்மையாகச் செயற்பாலது

வடநாடுகளில் கோடிக்கணக்கான சிறு தெய்வங்களை வணங்கி, அவற்றுக்கு ஊனுங் கள்ளும் படைத்து வெறியாட்டு வேள்விகள் எடுத்த ஆரியர்கள் இத்தென்றமிழ் நாட்டுக்கு வந்து குடியேறித் தாம் வணங்கிய சிறுதெய்வ வணக்கத்தையும் அவற்றிற்காக எடுத்த வெறியாட்டு வேள்விகளையும் அச்சிறு தெய்வங்களின்மேற் கட்டிவிட்ட புராணக் கதைகளையும் இந்நாடுகளிற் பரவ வைத்தார்கள். இந்நாடுகளில் நாகரிகமும் கல்வியறிவும் இல்லாத கீழ்மக்களே ஆரியர் நடைகளை மிகுதியாய்ப் பின்பற்றலாயினர். அதுகண்ட தமிழ்ச் சான்றோர்கள் ஆரியர் வணங்கிய சிறுதெய்வ இழிவும், தமிழர் வணங்கும் முழுமுதற் கடவுளாகிய சிவத்தின் உயர்வும் புலப்படுத்தல் வேண்டித் தாமும் பல புராணக் கதைகளை உண்டாக்கலாயினர். இவ்வாறு எழுந்த பலப்பல புராணக் கதைகளுட் கடவுளிலக்கணத்துக்குப் பொருந்துவனவும் அதற்குப் பொருந்தாதனவும் இருக்கின்றன. அவைகளையெல்லாம் செவ்வையாக ஆராய்ந்து பார்த்துப் பொருத்தமானவைகளை விளக்கி எழுதிப் பொருந்தாதவைகளை விலக்கி விடுவதற்கு உரிய சீர்திருத்தம் முதன்மையாகச் செயற்பாலதாகும்.

—மறைமலையடிகளார்

('மறைமலையடிகளார் அறிவுரைக் கோவை', பக். 194)

# சிரித்த நுணா—ஓர் ஆய்வு

[அரங்க. நலங்கிள்ளி,

ஆய்வாளர், தமிழ் இலக்கியத்துறை,

சென்னைப் பல்கலைக்கழகம்.]

கவிஞர் வாணிதாசனாரின் கவிதைப் படைப்புகளில் சிரித்த நுணா என்பதும் ஒன்று. சிரித்த நுணா எனும் பாடலின் தலைப்பே அந் நூலின் தலைப்பாகவும் அமைந்திருப்பதே அப் பாடலின் சிறப்பிற்கோர் எடுத்துக்காட்டு. சங்க அகப்பாடல்கள் போன்று இப் பாடலுக்குக் கருப்பொருளாய் அமைந்திருப்பது இயற்கை வருணனையே. மேலெழுந்தவாரியாகப் பார்ப்போர்க்கு இப் பாடல் ஒரு காலைநேரக் காட்சியை மட்டுமே உணர்த்துவதாகத் தெரியும். ஆனால் கவிஞர் இப் பாடலின்மூலம் உணர்த்தக் கருதி அமைத்த தொனிப்பொருள் ஒன்று உண்டு. இப் பாடலோடு நுண்மாண் நுழைபுலத்தொடு பார்ப்போர்க்கு இதனுள் பொதிந்து கிடக்கும் குறிப்புப் பொருள் (தொனி) தெரியாமல் போகாது. இனி, பாடலைப் பார்ப்போம்.

பொற்குழம்பு ஊற்றைப் புவியிற் பாய்ச்ச
வெட்டித் திறந்தான் விண்ணிற் பரிதி;
உடல்தோறும் உயிர்தோறும் உருக்கிய பொன்னும்!
கொடிவழி நடந்தேன்! குலவும் புட்கள்
'வீர்வீர்' என்று விரைந்து வானில்
'ஊச்' சென் றென்னை ஏசிப் போயின!
காலில் அங்கோர் காரைமுள் தைத்தது
'வெடுக்'கெனப் பிடுங்கினேன்! கடுத்தது முள்வாய்!
கடுத்ததென் னுள்ளம்! சாலையில் தென்றல்
வந்தது; மணத்தை வாரி இறைத்ததே!
என்மன மதனை இந்று நாற்றம்
வந்த திசையின் வழியே செலுத்தினேன்!
காய்த்த ஈச்சங் காட்டின் நடுவே
எட்டிக் கூவி என்னை அழைத்து
முல்லை நாணக் 'கொல்' எனச்
சிரித்தாள், அடடா! சிறுநுணாப் பெண்ணாள்![1]

---

1. சிரித்த நுணா, ப. 36.

பாடலின் சுருக்கமான பொருள்: காலை நேரத்தைக் கவிஞர் தம் கண் முன்னே கொண்டுவருகின்றார். அங்கே பொற்குழம்பு ஊற்றை வெட்டித் திறந்ததுபோல் ஞாயிற்றின் உதயம். பொன்னொளி பாயும் காலைப் போதில் கவிஞர் மெல்ல நடந்துகொண்டிருக்கின்றார். நெருக்கமான ஒற்றையடிப்பாதை. காலடியோசை கேட்டுப் புதரிலிருந்த பறவைகள் சிறகடிக்கின்றன. பாதையில் கிடந்த முள்ளொன்று காலில் தைத்து வேதனையைத் தருகின்றது. முள் தைத்த வேதனையைப் போக்குவதுபோல் காலைத் தென்றல் தவழ்கின்றது. தென்றலோடு இனிய மணமும் கலந்து வரவே மணம் வந்த திசை கவிஞரை ஈர்க்கிறது. அங்கே அவர் கண்ணுக்கு விருந்தாக மலர்ந்த நுணுப்பூ தெரிகின்றது. அது மலர்ந்திருந்தது கொல்லெனச் சிரிப்பதுபோல் கவிஞரின் கற்பனையில் விரிகின்றது. இதுவே பாடலின் வரிகள் உணர்த்தும் மேலோட்டமான பொருள்.

கவிஞரின் ஒன்றிய உணர்வோடு நாமும் ஊடுருவிச் செல்லும்போது இப் பாடலின் ஒவ்வோர் அடியும் ஒரு தொனிப் பொருளைக் கருத்திற்கொண்டு அமைக்கப்பட்டிருப்பது புலனாகும்.

இப் பாடலின் வழியே ஒட்டு மொத்தமாகக் கவிஞர் உணர்த்தக் கருதிய குறிப்புப் பொருளாவது: ''மனித மனம் வாழ்க்கைப் பிரச்சினைகளால் துவண்டுவிடும்போது மனித செயலுக்கு அப்பாற்பட்ட இயற்கையின் செயல்களோடு இணைந்து ஒன்றிப் போவோமாயின் துன்பமும் தொல்லையும் ஒழிந்து எங்கும் எப்போதும் இன்பம்! இன்பம்!! இன்பமே!!! என்பதாம்.

இனி, இக் குறிப்புப் பொருளை உணர்த்தக் கவிஞர் கையாண்ட சூழலைப் பார்ப்போம். அமைதியற்ற ஒரு மனம் அமைதியைத் தேடி அதிகாலையை நாடுகின்றது. அமைதியை இழந்த உள்ளம் என்பது எதன்மூலம் ஊகிக்கப்படுகின்றது எனின் 'கொடிவழி நடந்தேன்' எனும் சொல்லாட்சியால். எவ்வாறெனின் காலையில் கவிஞர் ஏதேனும் ஒரு பெருஞ்சாலையின் வழியே உலாவச் சென்றிருக்கலாம். காலைப்போதில் வீதிகளில் ஆரவாரம் அதிகமாக இராது. அமைதிக்குக் கேடு விளைக்காது இருப்பினும் கொடிவழியை ஏன் நாட வேண்டும்? கொடிவழி என்பதோ மிகவும் குறுகலான பாதையை உணர்த்தும். பெரிய சாலைகளில் பெரிய அளவிற்கு ஆரவாரம் துவங்கியிராவிட்டாலும் சிறுசிறு நடமாட்டங்கள் துவங்கியிருக்கும். அந்தச் சிறு இடையூறும் அமைதி இழந்த மனத்தைக் கெடுக்கும் எனக் கருதியே, இடையூறுகளோ ஆரவாரமோ இல்லாத கொடிவழியை நாடுகின்றது கவிஞரின் மனம்.

அடுத்து நடந்தேன் என்ற சொல்லாட்சியைக் கவிஞர் கையாண்டிருப்பதும் கவனிக்கற்பாலது. விரைந்தேன் எனக் கூறியிருக்கலாம். விரைந்து செல்ல விரும்பவில்லை அவர். காரணம் கொடிவழியில் பறவைகள் காலைப்போதில் அன்பின் கிறக்கத்தில் ஆழ்ந்து தம்மை மறந்திருக்கும், அந் நிலையில் இடையூற்றைச் செய்யக் கவிஞரின் மனம் துணியவில்லை. எனவே தான் மெல்ல நடந்தேன் என்கின்றார். ஆனாலும் நுண்ணுணர் வுடைய பறவைகளுக்கு அதுவே பேரிடையூறாகி விட்டது. வீர் வீர் என்று சிறகை அடித்துப் பறக்கின்றன. பறப்பதோடல்லாமல் ஏதோ புலம்பிவிட்டும் செல்கின்றன. அது கவிஞருக்கு வசை மொழிகளாய்ப் படவே 'கீச் கீச்' சென்றென்னை ஏசிப் போயின" என்கின்றார்.

அமைதி தேடிக் கொடிவழி வந்தவர்க்குப் பறவைகளின் வசை மொழியே கிடைக்கின்றது. துன்பம் தந்துவிட்டதாக எண்ணித் தளர்ந்துபோன மனம் கொடிவழியின் பாதையைக் கவனிக்க வில்லை. அங்குக் கிடந்த காரை முள்ளொன்று காலில் தைக் கின்றது. காலில் தைத்த முள்ளை மெல்லமெல்ல எடுக்க நினைத் தால் அது துன்பத்தைத் தருவதோடு முள்ளின் முனை உடைந்து காலிலே தங்கி மேலும் துன்பத்தை விளைக்கும். எனவேதான் 'வெடுக்கெனப் பிடுங்கினேன்' என்ற சொல்லாட்சியை அமைக் கின்றார். இது கவிஞர் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த சூழலையும் செயற்பாட்டையும் விளக்குகின்றது. அதன் விளைவு தான் இத்தகைய சொல்லாட்சி அமைவது.

அடுத்தபடியாக, 'கடுத்தது முள்வாய் கடுத்ததென் னுள்ளம்' எனும் வரியின் வாயிலாக உடல் இழந்த அமைதியையும், மனம் இழந்த அமைதியையும் உணர்த்திவிடுகின்றார். உடலும் உள்ளமும் அமைதியை இழந்துபோன நிலையில் காலைத் தென்றல் தவழ்கின்றது. தென்றலோடு இனிய நறுமணமும் கலந்து வருகின்றது. அந் நிலையில் அடுத்துப் பிறக்கின்ற வரிகள்,

> "என்மன மதனை இன்நறு நாற்றம்
> வந்த திசையின் வழியே செலுத்தினேன்"

என்பதாகும். இவ் வரிகளில் ஏதோ பொருள் முரண்படுவது போல் தோற்றுகின்றது. ஆனால் ஊன்றி நோக்கினால் இங்குத் தான் கவிஞரின் ஆளுமை புலப்படுகின்றது. காலையில் மணத்தை வாரிவந்த தென்றலை நுகர்வதற்கு நாசியே காரணமாக அமைந் தது. அந் நிலையில் அது நுகர்ச்சியை மூளைக்குணர்த்தியபோது மணம் வருவதற்கான காரணத்தை அறிய விழியைத்தானே

அத் திசை நோக்கிச் செலுத்த வேண்டும்? அவ்வாறிருக்க மனத்தைச் செலுத்தினேன் எனக் கூறுவது எவ்வாறு பொருந்தும் எனும் வினு எழலாம். இங்குக் கவிஞர் விழியால் திசையை நோக்குவதற்குமுன் நாசி மணத்தை உணர்த்தியதாலும் மேலும் அது நறுநாற்றமாக இருந்ததாலும் அமைதி தேடிய மனம் இன்ப மூட்டுகின்ற அந்த மணத்திலே குழைந்து சிக்கிக்கொண்டது. மூக்கின் வழியே மூளைக்குணர்த்தப்பட்ட நறுமணம் தந்த இன்பில் மனம் மணத்தோடு ஒன்றிக் கலந்துவிட்டது. எனவே நறுமணத்திற்கான காரண காரியங்களை மனமே ஆராய முற்பட்டுவிட்டது. இதனுல் சிந்தனை அங்கே சென்றுவிட்டது. இதை உணர்த்தத்தான் 'என் மனமதனை இந் நறுநாற்றம் வந்த திசையின் வழியே செலுத்தினேன்' எனும் வரிகளை அமைக்கின்ருர்.

சங்க இலக்கியங்களிலும் இதுபோன்ற அணுகுமுறைகள் கையாளப்பட்டிருக்கின்றன. தலைவன் வரும் வழி இன்னதெனத் தெரியாத நிலையிலும் தலைவியானவள்,

> ...என் நெஞ்சம் இனியே
> ஆரிருட் கங்கு லவர்வயிற்
> சாரல் நீளிடைச் செலவா ஞதே[2]

என்று தன் நெஞ்சைத் தலைவனது வழிச்செலவோடு பின்னிணைத்துக் கூறுவது இங்கு ஒப்புநோக்கற்பாலது.

அடுத்து "எட்டிக் கூவி என்னை அழைத்து, முல்லை நாணக் 'கொல்'லெனச் சிரித்தாள் 'அடடா' சிறு நுணுப் பெண்ணுள்" எனும் வரிகளை நோக்குவோம். நுணுப்பூ எட்டிக்கூவி அழைப்பதாக ஏன் அமைக்கின்ருர்? மலரின் அருகிலே சென்று அதன் அழகையும் மணத்தையும் நுகர்ந்ததாகக் கூறியிருக்கலாமே என எண்ணத்தோன்றுகின்றது. காரை முள் தைத்த இடத்திலே கவிஞர் நின்றுவிட்டார். நுணுப் பூவின் மணம் அவரை அடைந்துவிட்டதே தவிர நுணுப் பூ சேய்மையில்தான் சிரித்தது. முள் குத்திய துன்பத்தால் அதற்குமேல் நடக்க முடியவில்லை. இந் நிலையில் சேய்மையில் மலர்ந்திருந்த காரணத்தால் வெண்மையான நுணுப்பூ எட்டிக் கூவி அழைப்பதுபோல் கவிஞருக்குத் தோன்றியிருக்கிறது.

எட்டிக் கூவி அழைத்த பின்னர் முல்லை நாணக் 'கொல்' எனச் சிரித்தாள் என நுணுப் பூவைக் கண்டு வியக்கின்ருர். இங்கும் ஆசிரியர் ஏதோ பொருள் முரண்பாட்டு வரிகளைப் புகுத்திவிட்டதுபோல் தோன்றும். எவ்வாறெனின் முல்லை மலர் அந்திப் போதில் மலரும். நுணுப் பூவோ நள்ளிரவுக்குப் பின் மலரும்.

---

2. குறுந்தொகை, பா. 153.

இவ்வாறு இரு மலர் வகைகளும் மலர்கின்ற காலம் மாறிமாறி இருக்கும்போது நுணா சிரிப்பதும் முல்லை நாணுவதும் எங்ஙனம் நிகழும்? இது பொருந்தாததுபோல் தோன்றும். ஆனால் இது கவிஞரின் கருத்தன்று; கவிஞர் உணர்த்த நினைத்ததாவது, கவிஞர் நுணாப் பூவை மட்டுமோ அதன் மணத்தில் மட்டுமோ தம்மை இழக்கவில்லை. முல்லை மலரின் தன்மையிலும் மனத்தைச் செலுத்தியிருக்கிறார். முந்திய நாள் அந்தியில் மலர்ந்த முல்லை, பால் போன்ற தனது நிறத்தையும் இன்பந்தருகின்ற மணத்தையும் மலர்ச்சியையும் இழந்து துவண்டுபோய்விட்டது. இது முல்லையின் நிலை. ஆனால் பின்னிரவில் மலர்ந்தது நுணாப் பூ. மலர்ந்து சில மணி நேரங்களே ஆகின்றன. எனவேதான் பொழுது புலர்ந்த பின்னும் அது தன் மணத்தையும் நிறத்தையும் மலர்ச்சியையும் இழக்காமல் இருந்திருக்கின்றது. இந்த இரு நிலையும் கவிஞரின் மனத்தில் ஊடுருவிவிட்டன. இந் நிலையில் இயற்கைக் கவிஞரின் மனம் தனக்கே சிறப்பாக அமைந்துள்ள கற்பனா சக்தியால் மலர்களின் மெய்ப்பாட்டின் இயல்புகளுக்கேற்ப உவமை கொடுத்துச் சிறப்பிக்க நினைக்கின்றார். எனவேதான் வாடிக் கவிழ்ந்த முல்லை நாணிக் கவிழ்ந்ததாகவும், மலர்ந்த நுணா கொல்லெனச் சிரிப்பதாகவும் அமைத்துக் காட்டுகின்றார் கவிஞர்.

இறுதியாக எதைத் தேடி வந்தாரோ அது தமக்குக் கிடைத்துவிட்டமையையே நுணுக்கமாகச் சொல்லிவிடுகின்றார். அமைதி இழந்து உலவ வந்த இடத்தில் புட்களின் வசைமொழியும் காரை முள்ளின் கடுகடுப்பும் அமைதியை அலைக்கழித்த நிலையிலும் நுணாப் பூவின் மணமும் மலர்ச்சியும் கவிஞரின் நெஞ்சில் கற்பனையை எழுப்பிவிட்டு இயற்கையோடு இயைந்துவிடச் செய்துவிட்டன. இயற்கை ஈடுபாட்டில் தம்மை இழந்த நிலையில் மன உளைவு பறந்துபோன நிலையில் 'அடடா' என அவர் வாய் உச்சரிப்பது அவரது மனம் தேடிவந்த அமைதியை—இன்பத்தைப் பெற்றுவிட்டது என்பதை அழகாகக் காட்டிவிட்டது. எனவே தான் கொல் எனச் சிரித்தாள் 'அடடா!' சிறு நுணாப் பெண்ணாள் என்று கூறிப் பாடலை முடிக்கின்றார்.

சிரித்தாள் என நுணாப் பூவைப் பெண்ணாக உருவகப்படுத்தி இருக்கும் திறன் மேலும் மேலும் வியந்து போற்றிப் பாராட்டற் குரியது. கவிஞர் தேர்ந்தெடுத்து அமைக்கும் ஒவ்வொரு சொல்லின் பொருளாழத்தையும் பார்க்கும்போது உள்ளம் பூரிக்கின்றது. இவனல்லவோ கவிஞன்! இஃதல்லவோ கவிதை என மனம் குழைந்து போகிறது. சிரித்தாள் என ஏன் பெண்ணாக உருவகித்தான் என நினைக்கும்போது ஐம்புலனுக்கும் இன்பம் தரக்கூடிய ஒரே பொருள் பெண்தான். இதை,

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள"[3]

எனும் வள்ளுவரின் கூற்றாலும் அறிகின்றோம். இந்த ஐம்புல உணர்வையும் சிரித்த நுணாவின்மூலம் கவிஞர் பெற்றிருக்கின்றார். மெய், வாய், கண், மூக்குச், செவி எனும் ஐம்புலனுக்கும் இன்பம் தந்திருக்கிறது நுணாப் பூ. மலரைத் தடவி மணந்த தென்றலால் மெய்யுணர்விற்கும் சிரித்தாள் என நுணாப்பூவைப் பெண்ணாக உருவகித்தமையால் இதழ்ச் சுவையையும் மணத்தை நுகர்ந்ததால் நாசி உணர்வுக்கும், கொல்லெனச் சிரித்ததால் செவி உணர்விற்கும், வெண்மையாக மலர்ந்திருந்தது விழி உணர்விற்குமாக இன்பமூட்டியதால்தான் நுணாப்பூவைப் பெண்ணாக உருவகப்படுத்தியுள்ளார் கவிஞர்.

மலர்கள் நாணுவதாகவும் சிரிப்பதாகவும் எள்ளி நகைப்பதாகவும் பாடும் முறை சங்க இலக்கியங்களிலும் காணலாம்.

> "பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்
> தொகுமுகை இலங்கெயி றாக
> நகுமே தோழி நறுந்தண் காரே"[4]

எனும் குறுந்தொகைப் பாடலும், ஆங்கிலக் கவி 'வோர்ட்ஸ்வொர்த்' மலையடிவாரத்து மலர்கள் ஆடுவதாகவும் பாடுவதாகவும் பாடிய 'டேஃபடெல்ஸ்' பாடலும் வாணிதாசனாரின் இப்பாடலோடு ஒப்புநோக்கி உணரற்பாற்று.

"பானைச் சோற்றுக்குப் பருக்கைப் பதம்' என்பதுபோலக் கவிஞரின் புலமைக்கு இந்தச் 'சிரித்த நுணா' பாடலே குன்றின் மேலிட்ட விளக்காக ஒளி தரும்.

---

3. திருக்குறள், 1101.
4. குறுந்தொகை. பா 126.

---

## 'சமதர்மம்' பற்றித் திரு வி. க.

*பொதுவாகச் 'சமதர்ம'த்தில் எனக்குப் பற்றுண்டு. காரல் மார்க்ஸ் கூறிய சமதர்மம் நிறைவுடையதாகாதென்பதும், அதில் சன்மார்க்கங் கலந்தாலன்றி அது நிறைவு பெறாது என்பதும், இந்தியாவுக்குச் சன்மார்க்கமற்ற சமதர்மம் ஏற்றதாகாதென்பதும் என்னுடைய கருத்து.*

திரு. வி. க.

(திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புகள்)

# வீரமாமுனிவரும் தமிழ் வளர்ச்சியும்

[முனைவர் பொற்கோ
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.]

வீரமாமுனிவர் என்ற பெயரில் தமிழகத்துக்கு நன்கு அறிமுகமான அறிஞர் சி. ஜே. பெஸ்கி அவர்கள் 17 ஆம் நூற்றாண்டில் இத்தாலி நாட்டில் பிறந்தவர். கி.பி. 1700 இல் நமது நாட்டுக்கு வந்த இந்தக் கிறித்துவப் பாதிரியார் தமிழ் மொழியை நன்கு கற்றுத் தேர்ச்சி பெற்றுத் தமிழோடும், தமிழ்ப் பண்பாட்டோடும் இரண்டறக் கலந்துவிட்டார்.

வீரமாமுனிவர் தமிழுக்குச் செய்த பணிகள் தமிழ்மொழி வரலாற்றில் நிலையான இடம்பெற்றுவிட்டன. இந்த அறிஞரின் அரும்பணிகள் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட அறிஞர் களேகூட வியந்து போற்றத்தக்க வகையில் அமைந்துள்ளன என்று கூறினால் அஃது ஒரு சிறிதும் மிகையாகாது. மொழித் துறையிலும், இலக்கியத்துறையிலும் இவர் ஆற்றிய பணிகள் தமிழ் வரலாற்றிலேயே ஒரு புதிய எழுச்சிக்குரிய காலகட்டத்தை உருவாக்கின.

## 1. அகராதி :

கற்றறிந்த அறிஞர்களுக்கு மட்டுமின்றி எல்லோருக்கும் பயன்படத்தக்க வகையில் முதன்முதலாக அகராதியை உருவாக்கித் தந்த பெருமை வீரமாமுனிவர் அவர்களையே சாரும். இப்படிப்பட்ட அகராதிகள் வருவதற்கு முன்பு தமிழில் நிகண்டுகள் இருந்தன என்பது உண்மைதான். ஆனால் அந்த நிகண்டுகள் முறையாகக் கல்வி கற்ற அறிஞர்களுக்கே பயன்பட்டு வந்தன. செய்யுளிலேயே அமைந்த அந்த நிகண்டுகள் பொதுமக்களுக்கும், பள்ளிச் சிறுவர்களுக்கும் எளிதில் பயன்படக்கூடியனவாக இல்லை. தமிழ்மொழியில் உள்ள சொற்களை எல்லாம் திரட்டிப் பொருளும், விளக்கமும் தந்து காக்கவும், தேவையான சொற்களைத் தகுந்த முறையில் ஆளவும், அகராதியைப்பற்றிய அறிவு மிகவும் இன்றியமையாதது. அகராதிக்கலையைத் தமிழகத்துக்கு அறி முகப்படுத்திய வீரமாமுனிவர் இலக்கியத் தமிழுக்கு அகராதி அமைத்து இருப்பது மட்டுந்தான் நம் எல்லாருக்கும் தெரியும். இவர் பேச்சுத் தமிழுக்குங்கூட அகராதி அமைத்து இருக்கிறார் என்று தவத்திரு ஞானப்பிரகாச அடிகளார்மூலம் அறிகிறோம்.

## 2. இலக்கணம் :

மரபு முறைப்படி தமிழ் இலக்கணங்களை நன்கு கற்றுத் தேர்ந்த வீரமாமுனிவர் தமிழ் இலக்கண மரபையொட்டித் தொன்னூல் விளக்கம் என்ற ஓர் அரிய இலக்கண நூலையும் தாமே படைத்து வழங்கியுள்ளார். மேலும் இலக்கியத்

தமிழுக்குச் செந்தமிழ் என்ற பெயரில் ஓர் இலக்கண நூலையும், பேச்சுத் தமிழுக்குக் கொடுந்தமிழ் என்ற பெயரில் இன்னும் ஓர் இலக்கண நூலையும் இவர் உருவாக்கி வழங்கியுள்ளார்.

3. எழுத்துச் சீர்திருத்தம்:

இலக்கியத்தமிழ் பேச்சுத்தமிழ் ஆகிய இருவகைத் தமிழ் நடையின் இயல்புகளையும் நன்கு ஆராய்ந்து இலக்கணம் படைத்த வீரமாமுனிவர் மொழிவளர்ச்சி நோக்கில் எழுத்துச் சீர்திருத்தத்திற்கும் அடிகோலியிருக்கிறார். எகர, ஏகார, ஒகர ஓகார உயிர்களுக்கும் இந்த உயிர்கள் சேர்ந்த உயிர்மெய்களுக்கும் வரிவடிவில் தகுந்த மாற்றத்தை ஏற்படுத்தி முதன்முதலாக எழுத்துச் சீர்திருத்தப்பணியை இவர் தொடங்கிவைத்தார்.

4. இலக்கியம்:

தம் காலத்தில் தமக்குக் கிடைத்த காப்பியங்களையும், சிற்றிலக்கியங்களையும், கற்று மகிழ்ந்த வீரமாமுனிவர் தேம்பாவணி என்ற காப்பியத்தையும், திருக்காவலூர்க் கலம்பகம் முதலாய சிற்றிலக்கியங்களையும் படைத்துத் தமிழ்மொழியின் இலக்கியப் பகுதிக்குப் பொலிவூட்டி வளம் சேர்த்திருக்கிறார்.

5. உரைநடை:

உரைநடை நூல்கள் மிகுதியாக இல்லாத காலத்தில் தமிழகத்துக்கு வந்த வீரமாமுனிவர் ஞானம் உணர்தல், பேதகம் அறுத்தல், பரமார்த்த குருகதை முதலாய உரைநடை நூல்களையும் எழுதித் தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு உதவி புரிந்திருக்கிறார்.

அகராதி, இலக்கணம், இலக்கியம், உரைநடை ஆகிய பல துறைகளிலும் இவரது பணிக்கு ஒரு சிறப்பிடம் உண்டு. நல்ல இலக்கியப் புலமை இல்லாத ஓர் அறிஞன் படைக்கும் இலக்கணம் வலிமை வாய்ந்த இலக்கணமாக அமைவது அரிது. நல்ல இலக்கணப் புலமை இல்லாத ஓர் அறிஞன் படைக்கும் இலக்கியமும் செம்மை வாய்ந்த சிறந்த இலக்கியமாக அமைவது அரிது. வீரமாமுனிவர் பன்மொழிப் புலமையும், இலக்கிய— இலக்கணப் புலமையும், மொழி வளர்ச்சிச் சிந்தனையும் ஒருங்கே அமையப்பெற்ற ஓர் அரிய தமிழ் அறிஞர். இன்றைய மொழி உலக அறிஞர்களுக்கெல்லாம் இவர் ஒரு வழிகாட்டியாக விளங்குகிறார். அறிஞர்களுக்கும், ஆசிரியர்களுக்கும், தமிழை விரும்பிக் கற்கும் மாணவர்களுக்கும் இவர் தோன்றாத் துணையாக இருந்து ஊக்கமும், எழுச்சியும் தந்து வருகிறார். தமிழ்நாட்டார்க்கும், பிற நாட்டார்க்கும் வீரமாமுனிவர் ஒரு கலங்கரை விளக்கம் என்றால் அது முற்றும் பொருந்தும்.

———

# சங்க நூல்களில் உடும்பு

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

''பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சில்
உடும்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றி''
—பெரும்பாணாற்றுப்படை 199, 200

''அரக்குவிரித் தன்ன செந்நில மருங்கிற்
பரற்றவ லுடும்பின் கொடுந்தா ளேற்றை''
—மலைபடுகடாம் 507, 508

''பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்
டுடும்படைந் தன்ன நெடும்பொரி விளவின்'' —நற்றிணை 24

''உடும்பு கொரீஇ வரிநுணல் அகழ்ந்து
நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி
எல்லுமுய லெறிந்த வேட்டுவன் அம்சுவல்''
—நற்றிணை 59

''உடும்புரித் தன்ன வென்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது'' —புறநானூறு 68

''வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக்
கேழற் பன்றி வீழ வயல
தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்''
—புறநானூறு 152

''..............................
முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவர்
உடும்பிழு தறுத்த கொடுங்காம்ப் படலை
சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார்
கொள்ளி வைத்த கொழுநிண நாற்றம்
மறுகுடன் கமழு மதுகை மன்றத்
தலந்தலை யிரத்தி யலங்குபடு நீழற்'' —புறநானூறு 325

''வேட்டச் சிறுஅர் சேட்புலம் படராது
படமடைக் கொண்ட குறுந்தா ளுடும்பின்
விழுக்குநிணம் பெய்த தயிர்க்கண் விதவை

யாணர் நல்லவை பாணரொ டொராங்கு
வருவிருந் தயரும் விருப்பினள் கிழவனும்''
—புறநானூறு 326

''வேட்டக் குடிதொறுங் கூட்டு......
......................
பாணி நெடுந்தேர் வல்லரோ ரோ''  —புறநானூறு. 333

உடும்பு பல்லியினத்தைச் சேர்ந்த ஊர்வன இனத்தைச் சார்ந்ததாகும். ஆங்கிலத்தில் Reptiles என்றழைப்பர். உடும்பைப் பற்றி அரிய செய்திகளைச் சங்க நூல்களில் கூறியுள்ளனர்.

பெரும்பாணாற்றுப்படையில் உடும்பினது முகத்தையொத்த பெருங் கொழுமறைய என்று கூறப்பட்டுள்ளது. உடும்பினது முகம் கூரியதாக இருக்கும். அதுபோலக் கலப்பையின் பெருங் கொழு இருந்ததாகக் கூறியது சரியேயாகும். உடும்பின் தலைப் பாகத்தை (Nostril about midway between eye and end of muzzle which is high and (arched) 'arched' என்று சொல்லப் படுவதே ஏர்க்கொழுவின் உருவத்தைக் காட்டுகிறது. சூழ்நிலை யைப் பொறுத்தமட்டில் அரக்கு விரித்தன்ன நிலத்தில் காணப்பட்ட தாகக் கூறியதும் சரியே. இதை நான் கண்கூடாகக் கண்டிருக் கின்றேன். நற்றிணை உடும்பின் உடலைப்பற்றிக் கூறிய உவமை அரிய உவமை. ''நிலம் பிளவு படுமாறு இறங்கிய வேரும் பெரிய கிளைகளும், அடியில் உடும்பு செறிந்தாற் போன்ற பொரிந்த செதில்களுமுடைய நெடிய விளாமரத்தின்'' என்று கூறியது அரிய செய்தி. விளாமரத்தின் பட்டை பொரிந்து காணப்படும். அது போன்றே உடும்பின் தோலும் பொரியாகக் காணப்படும். (colour speckled with black on variable ground, yellowish or brownish) Brownish ground என்பதையே அரக்குவிரித்தன்ன நிலத்தில் காணப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. விளவின் பொரிந்த பட்டையும் நிறத்திலும் உருவத்திலும் உடும்பின் தோல் போன்றே இருக்கும்.

உடும்பு என்ற பெயரே அதன் உடல் அமைப்பின் பெயரால் வந்தது. கொங்கு நாட்டில் ஓணானை உடக்கான் என்ற பெயரால் அழைக்கின்றனர். ஒடுங்கிய உடல் உள்ளதால் உடக்கான் என்று ஓணானும் உடும்பும் அழைக்கப்படுகின்றன. அறிவியலில் Body compressed and keeled என்று சொல்வதைக் கவனிக்க வேண்டும். இந்த அறிவியல் விளக்கத்திலிருந்து உடும்பு என்ற பெயர் எவ்வளவு பொருத்தமாகச் சூட்டப்பட்டிருக்கிறது என்பதைப் புரிந்துகொள்ளலாம். உடும்பைத் தின்பது சங்க

காலத்திலேயே வழக்கமாக இருந்துள்ளது. உடும்பை உரித்த பிறகு பட்டினியால் மார்பெலும்பு தெரியும் மனித உடல்போலத் தோன்றியதாகக் கூறியது உண்மையே.

உடும்பின் உடலில் கொழுப்பு நிறைய உண்டு. புறநானூறு அடிக்குறிப்பில், உடும்பினது நிணத்தை "உடும்பின் விழுக்கு நிணம்" என்று "அறுத்த உடும்பிழுதையென்க" என்று கூறியிருப்பதையும் காணலாம். உடும்பின் விழுக்கு நிணம் ஒடுங்காய் அஃதாவது ஒடுவங்காயைப் போல இருந்ததைப் புறநானூறு கூறினதை உ. வே. சாமிநாதையர் குறிப்பிடவில்லை. ஒடு மரத்தைப்பற்றித் தொல்காப்பியரே "ஒடு மரக் கிளவி" (தொல் உயிர். சூ. 60) என்று கூறியுள்ளார். இந்த ஒடு மரத்தை இன்றும் கொங்கு நாட்டில் வேலியாகப் பயன் படுத்துகின்றனர். ஒடுமரம் எளிதில் நீர் குறைந்த இடத்திலும் நன்கு வளரும். ஒடுவங்காய் ஓசையுடன் வெடிக்கும். ஒடு மரத்தை அறிவியலில் cleistanthus collinus என்றழைப்பர்.

உடும்பை உண்பதற்காகச் சங்க காலத்தில் வேட்டையாடி இருக்கின்றனர். 'உடும்பு கொரீஇ' வேட்டுவன் செய்த வேட்டையை நற்றிணை (59) கூறியுள்ளது. யானையையும் சிறுத்தைப் புலியையும், புள்ளி மானையும், காட்டுப் பன்றியையும் தாழ்வான புற்றில் இருந்த உடும்பையும் கொன்ற வல்வில்லோரியைப்பற்றிப் புறநானூறு கூறியுள்ளது. உடும்பைச் சங்ககாலத்தில் உண்டதைப் பற்றிப் புறநானூறு 321, 325ஆம் பாடல்கள் கூறியுள்ளன. உடும்பினது நிணத்தை முற்றத்தில் கூறுசெய்து கொடுப்பதைப்பற்றிப் புறநானூறு கூறியுள்ளது. இப்பொழுதும் சிற்றூர்களில் ஆடு முதலிய விலங்குகளை வெட்டி உண்ணும்போது 'கூறு போடுதல்' வழக்கமாக உள்ளது. புறநானூறு 326ஆவது பாட்டில் விழுங்குவதற்குரிய நிணத்தைத் தயிர்க்கூழில் பெய்து உண்டது கூறப்பட்டுள்ளது. வேட்டுவர் முதலில் உடும்புத் தோலால் செய்த கைச்சரடு கூறப்பட்டுள்ளது. உடும்பின் தோல் பாம்பின் தோல் போன்று அழகானது. பொரிகளையுடைய உடும்பின் தோலைப் பாடம் பண்ணி முதலையின் தோலைப்போல வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்யும் அண்மைக் காலம் வரை வழக்கமாக இருந்தது.

உடும்பின் இறைச்சியைச் சங்க காலத்தில் வேட்டுவர், பாணர் போன்ற இனத்தினர் விரும்பி உண்டனர். இக்காலத்தில் சில சாதியினர் உடும்பை விரும்பி உண்கின்றனர். உடும்பின் இறைச்சியைச் சிறந்ததாகக் கருதுகின்றனர். இதைப் பழமொழி நானூறு கூறுவது வியப்பாக உள்ளது.

> "கள்ளி யகிலும் கருக்காக்கைச் சொல்லும் போல்
> எவ்வற்க யார்வாயின் நல்லுரையதை - தெள்ளிதின்
> ஆர்க்கும் அருவி மலை நாட! நாய் கொண்டால்
> பார்ப்பாரும் தின்பர் உடும்பு." —பழமொழி. 36

உடும்பின் புலால் மிகச் சிறந்த சுவையுடையது என்பது கருதி நாய் கவ்வியதானாலும் பார்ப்பாரும் உடும்பைத் தின்பர் என்று பழமொழி நானூறு கூறுகின்றது. வடமொழியில் உள்ள மதநூல்களில் 'உச்சிஸ்தா' என்ற கொள்கை கூறப்பட்டுள்ளது, விடப்பட்டது என்ற பொருளாகும். ஒன்று முத்தமிடுவது. மற்றொன்று வேட்டையாடி நாய் கொண்டுவரும் விலங்கை உணவாக உண்ணலாம் என்பதாகும். இதைப்பற்றிக் குச்சிப்பிடி நாட்டியத்தில் மிகச் சிறந்த பெண்மணியான யாமினி கிருஷ்ணமூர்த்தி இந்து நாளிதழில் எழுதிய கடிதத்தை அப்படியே வெளியிடுகிறேன்:

"There is in the Hindu Scriptures no prohibition against kissing as such but it comes under the general ban which makes anything that has come into some tones mouth unfit for being touched of one's own. It is in fact a 'salivel laboo' or the concept of 'Ucchistha' or 'leavings'—a peculiarly Hindu concept.

There are however, two exceptions to this rule-both are 'sporting' concession. The first relates to "lovers dalliance". where the kiss is allowed; the second to the chase, where game retrieved by a dog is accepted as food. it is obvious that expediency has made a dent into principle here, but this is a recurring weakness with the human 'conscience'.

நாய் வேட்டையாடிக் கௌவியதை உண்ணலாம் என்ற ஒரு கருத்து வடமொழியில் உள்ள இந்து சாத்திரங்களில் இருந்திருக்கிறது. அதையே நாலடியாரில் பார்ப்பாரும் நாய் கொண்ட உடும்பைத் தின்பர் என்று கூறியுள்ளதைக் காணலாம். கீழானவர் வாயில் பிறந்ததே ஆயினும் நல்லுரையாயின் இகழாது நிற்க என்பதற்கு உவமையாக "நாய் கொண்டால் பார்ப்பாரும் தின்பர் உடும்பு" என்று கூறப்பட்டுள்ளது.

உடும்பு 'கொரீஇ' என்ற வழக்கைப்பற்றிப் பின்னத்தூர் நாராயணசாமி ஐய்யர் விளக்கிய உரை அருமையானது: "காதலிய

லார் பகல் பொழுதெல்லாம் சூழ ஆடைபரப்பி நின்று கலேத்த வெளி வந்த உடும்பை ஈட்டியாலே குத்தி மண்ணி முழுகி மறைந்து கிடக்கும் வரிகளேயுடைய நுணலேயை மண்வெட்டி யாலே பறித்தெடுத்து நெடுகிய கோடுகளேயுடைய புற்றுக்களே வெட்டிப் புகை மூட்டியை வைத்து வெளிவந்த ஈயலேத் தாழியிலே பெய்துகொண்டு, வளேதடியால் முயலே எறிந்து பற்றிய வேட்டுவன் இரவில் அழகிய தோளிலே சுமந்து வந்து பலவேறு வகையாகிய அப் பண்டங்களேப் பொதிந்து மூடையுடனே ஏனேய கருவிகளேயும் மனேயகத்துப் போகட்டு மறந்து ஆங்கு மிகுதியாகப் பருகிய கள்ளின் இனிய மயக்கத்தாலே செருக்குண்டு கிடவா நிற்கும் வன்புலத்ததாகில் காடு சூழ்ந்த காடு'' என்று கூறிய உரை நுண்ணிதான இயற்கை உரையாகும். உடும்பு பகற்பொழுதில் வெளிவராது. விடியற்காலே, மாலேப்பொழுதில்தான் புற்றிலிருந்து வெளிவரும். அதனுல் உடும்பை ஈட்டியினுலேயே குத்தினுன். மண்ணில் மூழ்கி மறைந்து கிடந்த வரிகளேயுடைய தவளேயை மண்வெட்டியாலே பறித்தெடுத்தான். நெடுகிய கோடுகளேயுடைய புற்றுக்களே வெட்டிப் புகை மூட்டியை வைத்து வெளிவந்த ஈயலேத் தாழியிலே பெய்தான். வளேதடியாலே காட்டு முயலே எறிந்து எல்லாவற்றையும் மூட்டையில் கொண்டுவந்தான். உடும்பு, நுணல் என்ற தவளே, ஈசல், முயல் ஆகியவற்றை இயற்கையில் காலேயிலும், மாலேயிலுந்தான் வெளிவருவதைக் காணலாம். ஒவ்வொன்றையும் எப்படிப் பிடிப்பது என்பதை வேட்டுவன் அறிந்திருந்தான். உடும்பை ஈட்டியால் குத்திப் பிடிக்கும் பழக்கம் இப்பொழுதும் உள்ளது. ஆனுல் வலேயில் பிடிப்பது இப்பொழுது பின்பற்றப்படும் பெரும்பாலான பழக்கமாகும். ''கொருவுதல்—குற்றுதல் குத்துதலென்று வழங்குகின்றது'' என்று நாராயண சாமி ஐயர் எழுதியிருக்கின்ருர். உடும்புக்குத் தோல் கெட்டியான தால் குத்தி என்று கூறியது பொருத்தமே. வரிநுணல் அகழ்ந்து கொண்டதைக் கூறியிருப்பதால் தவளேயையும் உணவுக்காக வேட்டுவன் பறித்தெடுக்கிருன். இக்காலத்தில் இந்தியாவி லிருந்து பச்சைத் தவளேயின் கால் பிரெஞ்சு நாட்டிற்கு ஏற்றுமதி யாகிறது.

உடும்பைப் பிடிப்பதற்கு ஒரு வழி இருந்தது. ஆடை சூழ விரித்துக் கலேக்கப்பட்ட உடும்பு ஆடைமேல் ஓடினுல் அதன் வளேந்த உகிர் துகிலிலே சிக்கிக்கொண்டு விழுமாதலின் பற்றுதல் எளிதாதல் பொருட்டு என்று கூறியதும் சரியே. உடும்பிற்குக் கூரிய உகிர் உள்ளதால் ஆடையில் உகிர் பதிந்து மாட்டிக் கொள்வதும் இயற்கையே. ஈயல் பிடிப்பது கோடுகளே ஒழுங்கு பெறச் சிதைத்து மேலே விழலால் மூடிச் சேற்றைப் பூசி ஒரு துளே

வைத்து அதில் புகை மூட்டியை வைத்தூதுவதினல் உள்ளிருந்த ஈயல் வெளிவரும். அங்கே வேருெரு புழை செய்து புகை போகும் வழியுண்டாக்கி அதில் ஒரு தாழியை வைத்திருந்தால் வந்த ஈயலெல்லாம் தாழியிலே படியுமென்றதாகும் என்று கூறிய உரை அரிய உரையாகும். ஏனெனில் இதுபோன்று புகை மூட்டி ஈயலைப் பிடித்து அதன் உடலை வறுத்து அரிசிப் பொரியொடு கலந் துண்ணும் சில சாதியினர் வழக்கத்தை மாணவனுக இருக்கும் போது கண்டிருக்கின்றேன்.

நாய் கொண்டும் உடும்பைப் பார்ப்பாரும் தின்பர் என்று நாலடியார் கூறியுள்ளது. நாலடியாரைச் சமணமுனிவர்கள் இயற் றினர் என்பது தெரிந்தது. சமணர்களிடையே வருண தர்மம் வெறுக்கப்பட்டது. சமணர் பார்ப்பனீயத்தை வெறுத்தனர். புலால் உண்ணுக் கொள்கையைக் கொண்ட ஆரியர்கள் வேத காலத்தில் புலால் உண்டு வந்தனர். அதனுல்தான் பார்ப்பாரும் தின்பர் உடும்பு என்று நாலடியார் கூறிற்று. உடும்பின் புலால் மிக சுவையுடையது என்பதாலும் நாய் கொண்டுவந்ததாலும் உண்டனர் என்று கருதவேண்டியுள்ளது. நாயினுடைய நாக்கு Antiseptic என்று சொல்வார்கள். ஆதலின் அது கவ்விய பறவையையோ, விலங்கையோ தின்ருல் மனிதனுக்கு ஊறு செய்வதில்லை என்பர்.

யாப்பருங்கலக்காரிகை விருத்தியில் உடும்பன் என்ற தலைவன் பெயர் கூறப்பட்டுள்ளது. இன்றும் ஆனைமலையில் ‘உடும்பன் சோலை’ என்ற காடு உள்ளது. உடும்பைக் கோட்டைச் சுவர்களில் ஏறவிட்டு அதன் இடுப்பில் கயிற்றைக் கட்டி அதைப் பிடித்துக்கொண்டு கோட்டையின்மேல் போர் வீரர் ஏறுவர் என்ற நம்பிக்கை உள்ளது. அந்த நம்பிக்கை அடிப்படையாக ‘கோர்ப் பாடே’ (Gorpade) என்ற மராத்தியப் போர் வீரர் குடும்ப இனத் தினரும் பெயர் சூட்டிக்கொள்கிருர்கள். ஆனுல் அறிவியல்படி அதில் உண்மையே யில்லை. உடும்பிற்கும், பல்லியைப்போலச் சுவரில் ஏறப் பிடிப்பு உண்டு. ஆனுல் போர் வீரர்கள் கோட்டைச் சுவரை உடும்பின் பிடியால் ஏறும் அளவு சக்தியற்றது. “உடும்புப் பிடி” என்ற வழக்கு இந்த நம்பிக்கையால் வந்தது.

உடும்பை ஆங்கிலத்தில் Large Land-Monitor என்று அழைப்பர். அதன் அறிவியல் பெயர்: Varanus bengalensis.

———

# திருப்பைஞ்ஞீலி குடைவரைக்கோயில்

[தி. இராசமாணிக்கம், பி ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருட்டிண சாலை, சேலம்-7]

திருச்சியினின்றும் ஏறத்தாழ 16 கி. மீ. தொலைவில் திருப் பைஞ்ஞீலி என்னும் தலம் உள்ளது. ஞீலி என்னும் ஒருவகை வாழை தலமரமாக உள்ளதால், இப்பதி திருப்பைஞ்ஞீலி எனப் பெறுகிறது.

''கோடல்கள் புறவணி கொல்லை முல்லைமேல்
பாடல் வண்டிசை முரல்பயில் பைஞ்ஞீலியார்''

என ஞானசம்பந்தப் பெருமானாலும்,

''கோடல் கோங்கம் புறவணி முல்லைமேல்
பாடல் வண்டிசை கேட்கும் பைஞ்ஞீலியார்''

என அப்பர் பெருமானாலும்,

''மலைத்த சங்தொடு வேங்கை கோங்கமும்
மன்னு காரகில் சண்பகம்
அலைக்கும் பைம்புனல்சூழ் பைஞ்ஞீலி''

எனச் சுந்தரமூர்த்தி அடிகளாலும் பாடப்பெற்ற பேறு பெற்றது இத்தலம்.

பசியாலும் நீர்வேட்கையாலும் வருந்திய அப்பர் பெருமானுக்கு இறைவன் பொதிசோறும் நீரும் கொடுத்து இளைப் பாற்றிய தலம் இது. மேலும் இங்குள்ள கருவறையில் வடபுறச் சுவரில் உள்ள புரையில் பிச்சை உகக்கும் பெம்மானின் வடிவம் காணப்படுகிறது. அவ் வடிவில் கைபுனைந்து இயற்றிய எழில் நம் முன்னோரின் கலைத்திறமைக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாம். அதன் அழகார்ந்த வடிவில் தம்மை மறந்துவிடுகிறார் சுந்தரமூர்த்தி அடிகள். அவ் வடிவிலே மயங்கிய ''மின்னும் நுண்ணிடை மங்கைமார் பலர் வேண்டிக் காதல் மொழிந்த'' சொல்லாகப் பதிகத்தைப் பாடியுள்ளார்.

''குரவம் நாறிய குழலினர் வளைகொள்வதே தொழிலாகீர்
இரவும் இம்மனை அறிதிரே இங்கேநடந்து
போகவும் வல்லீரே''

என்றெல்லாம் பாடியுள்ளார். சிவபெருமானின் வேறு எந்த வடிவின்மீதும் இவ்வாறு ஒரு பதிகம் சுந்தரர் பாடவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இத்தகைய பேறு பெற்ற கோயிலின் திருச்சுற்றில் உள்ள பாறையில் மேற்கு நோக்கிக் குடைவரை ஒன்று உருவாக்கப் பட்டுள்ளது. இது சதுரமான கருவறை, அந்தராளம், மற்றும் சிறிய அளவிலான மண்டபம் ஆகியவற்றைக் கொண்டது. கருவறையின் பின்சுவரில் இறைவன் சோமாஸ்கந்த வடிவில் புதை சிற்பமாகக் காணப்படுகின்ருன். ஆறேறு சடையன் நான்கு கைகளுடன் உருவாக்கப்பட்டுள்ளான். பின்வலக்கையில் மானும், பின்இடக்கையில் அக்கமாலையும் காணப்படுகின்றன. முன்வலக்கை 'வியாக்யான முத்திரை'யில் இருக்க, முன்இடக்கை தொடையின்மீது உள்ளது. ஒரு கால் மடக்கியும், மற்ரெரு கால் தொங்கிய நிலையிலும் அஃதாவது பேரின்ப இருக்கையில் (சுகா சனத்தில்) உட்கார்ந்து உள்ளான். அவனுக்கு வலப்புறமாக அன்னை பராசக்தி இரு கைகளுடன் செதுக்கப்பட்டுள்ளாள். வலக் கையில் பூ உள்ளது. ஒரு கால் தொங்கிய நிலையிலும், மற்ரெரு கால் குத்திட்டும், அஃதாவது வீர இருக்கையில் (வீரா சனத்தில்) உட்கார்ந்த நிலையில் உள்ளாள். இருவருக்கும் இடையில் முருகன் நின்ற நிலையில் உருவாக்கப்பட்டுள்ளான். இறைவனின் காலடியில் உருவம் ஒன்று காணப்படுகிறது.

இங்குள்ள பாறை வேங்கையின் நிறம் போன்று தோற்ற மளிக்கிறது. வேங்கை ஒன்று இறைவனை வழிபட்டு வந்ததாம். ஒருநாள் வேடன் ஒருவனின் அம்பால் அடிபட்டு, அஃது இறைவன் முன் இறந்துவிட்டதாம். அஃது இறக்கும் தறுவாயில் இறைவ னிடம் வேண்டிக்கொண்டபடி இங்குப் பாறையின் நிறம் வேங்கை யின் நிறம் போன்று ஆகிவிட்டதாகச் செவிவழிச் செய்தி ஒன்று இங்கு நிலவி வருகிறது. "வியாக்ரகத்திற்கு மோட்சம் கொடுத்து, நீடுபுகழ் தார்புனைந்த நீலகண்ட நாயகரே" என்று இதுபற்றிப் பாடப்பெற்றுள்ளது.

தமிழகத்தில் குடைவரைக் கோயிலைத் தோற்றுவித்த பேறு பெற்றவன் பல்லவப் பேரரசனுன மகேந்திரவர்மன். "குருகத்தி புன்னை, அல்லியிடைப் பெடைவண்டுறங்கும் கலிக்கச்சி"யில் கோலோச்சியவன். இவனது காலத்திலும் இவன் மைந்தனுன வாதாபி கொண்ட மாமல்லன் காலத்திலும் உருவாக்கப்பெற்ற குடைவரைக் கோயில்களின் கருவறையில் இறையின் எந்த உருவும் அமைக்கப்படவில்லை. இவர்கள் வழிவந்த இராசசிம்மன் காலத்தில் கருவறையின் பின்சுவரில் சோமாஸ்கந்த வடிவம்

அமைக்கப்பெறலாயிற்று. மகாபலிபுரத்தில் உள்ள இயமபுரி எனப் படும் மகிடாசுரசமர்த்தினி குடைவரைக் கோயில் மற்றும் கடற்கோயில் ஆகியவற்றில் உள்ள சோமாஸ்கந்த வடிவங்களை எடுத்துக் காட்டாகக் குறிப்பிடலாம்.

“முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்போன்” என்பதினின்றே தமிழ்மக்களுக்கு முருகனிடம் உள்ள ஈடுபாடு தெரிய வரும். தாங்கள் வணங்கும் இறையின் வடிவங்களில் முருகன் வடிவைக் குழந்தை வடிவாகக் காண்பதில் அவர்கள் தனி இன்பம் கண்டனர். குழந்தையைத் தாயுடனும் தந்தையுடனும் ஒருசேரக் காண்பது இயற்கை. அதன் விளைவே சிவனுமைமுருகு (சோமாஸ்கந்த) வடிவம். எனவே முருகன் வழிபாடு சிறப்பாகக் கொண்டாடப் படும் தமிழகத்தில் அதற்கே உரிய வடிவங்களில் இஃது ஒன்றாக அமைந்ததில் வியப்பு இல்லை.

ஆகமங்களில் சோமாஸ்கந்த மூர்த்தி, உமாசகித மூர்த்தி மற்றும் உமாமகேசுவரமூர்த்தி ஆகிய வடிவங்களில் அண்ண லுக்கு இடப்புறமாக அன்னை இருக்கவேண்டும் என்று குறிப்பிடப் பட்டுள்ளதாக, திரு. கோபிநாதராவ் தமது “இந்து சமயத் தெய்வங்களின் வடிவங்கள்” என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். பல்லவர்களின் சோமாஸ்கந்த வடிவங்களிலும் இவ்வாறுதான் உள்ளது. ஆனால் இங்கு அதற்கு மாறாக அன்னை அண்ணலுக்கு வலப்புறமாக உள்ளது குறிப்பிடத்தக்கது. முருகன் அமர்ந்த நிலை, நின்றநிலை அல்லது நடனநிலை என்ற எந்த நிலையிலும் அமைக்கப்படலாம் என ஆகமங்கள் சொல்லுகின்றன. ஆனால் பொதுவாக முருகனை அமர்ந்த நிலையில் வடிப்பதுதான் வழக்கம். இங்கு முருகன் நின்ற நிலையில் உருவாக்கப்பட்டுள்ளது மற்று மொரு வேறுபாடாகும்.

இந்த வடிவத்தின் காலடியில் காணப்படும் உருவம் இங்கு இயமன் எனக் கூறப்படுகிறது. எனவே இஃது இயமன் கோயில் என அழைக்கப்பெறுகிறது. திருக்கடையூரில் மார்க்கண்டேய னுக்காகக் காலனைக் காலால் கறைக்கண்டன் காய்ந்தான். பின் வானவர் வேண்டுகோளின்படி, இயமனை உயிர்ப்பித்ததாகவும், தன் அன்பர்களை அணுகக்கூடாது என்ற கட்டுப்பாட்டின்பேரில் இயமனை மீட்டும் தனது பணியினைப் புரிய இங்கு ஒப்புதல் தந்த தாகவும் ஒரு செவிவழிச் செய்தி நிலவுகிறது. எனவே இஃது அதிகார வல்லபர் திருமுன் எனவும் அழைக்கப்பெறுகிறது.

இறைவனின் ஆடவல்லான் மற்றும் ஆலமர் செல்வன் வடிவங்களின் காலடியில் முயலகன் அமைக்கப்பட்டுள்ளதை

எங்கும் காணலாம். மேலும் சோமாஸ்கந்த வடிவின் காலடியில் இன்ன உருவத்தை அமைக்கவேண்டும் என ஆகமங்களில் கூறப்பட்டதாகத் தெரியவில்லை. பல்லவர்களது சோமாஸ்கந்த வடிவங்களின் காலடியில் அவனது ஊர்தியாம் காளை காணப்படுகிறது. முயலகன் அறியாமையைக் குறிக்கிறது. அறியாமையை அகற்றினுல் அன்றி ஆண்டவனை அடைய இயலாது என்பதை உணர்த்தவே இறைவனது காலடியில் முயலகன் வடிவம் அமைக்கப்பட்டு வந்தது. எனவே இங்குள்ள உருவத்தையும் முயலகனுகக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

தமிழகத்தில் ஏழாம் நூற்ருண்டில் குடைவரைக்கோயில்கள் தோன்றின. எட்டாம் நூற்ருண்டில்தான் புதை சிற்பங்களுக்குத் தனி முதன்மை அளிக்கப்பட்டது. எனவே இதன் காலத்தை 8-9ஆம் நூற்ருண்டாகக் கொள்ளலாம்.

———

## "நற்றமிழ் வாணர்க்குச் சான்றவர்"

[வேலூர். ம. நாராயணன், எம். ஏ,]

"மறைமலை யென்பவர்: மாட்சிமை மிக்கவர்:
முமமொழி கற்றநல் நாயகம்—தமிழ்ச்
செம்மொழி யேயவர் தாயகம்!

நிறைபுலம் வாய்ந்தவர்: நேர்மைத் திறத்தவர்:
நெஞ்சத் துணிவினில் இரும்பு—நாளும்
நூற்பொரு ளாய்வதில் கரும்பு!

திரைகட லோடியுந் தீந்தமிழ் தந்தவர்:
தனித்தமிழ் நெறியினைக் கண்டவர்—அன்னைத்
தமிழகம் முழுவதும் விண்டவர்!

ஆரியர் குலத்தின் 'சூரிய நாரணர்':
அகமகிழ்ந் துதவிய நாவலர்—மேனுள்
அன்னைத் தமிழ்மொழிக் காவலர்!

சீரிய பண்பினர்: கூரிய மதியினர்:
சுந்தரம் பிள்ளைக்கு மன்பராம்—நம்
'தேவநே யருக்கும்' நண்பராம்!

நரைதிரை யின்றியே நலமுடன் வாழ்ந்தவர்:
நாற்பது நூல்களை ஈன்றவர்—உயர்
நற்றமிழ் வாணர்க்குச் சான்றவர்!"

# ஈயென்னேவல்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

ஈ, தா, கொடு எனும் மூன்றேவலும் முறையே இழிந்தோன், ஒப்போன், மிக்கோன் இரப்புரைகளாகப் பண்டுதொட்டு வழக் கூன்றியவை. தனிநெடில் ஓரெழுத்தொருமொழியாகவும் ஏவல் வினையாகவும் வரும் ஆ, ஈ, தா, சா, பா, தீ, சீ போல்வன ஏவல் வினைக்கெனத் தனித்த ஈறு பெற்றிருந்தன என நாட்டுதற்கான சான்றுகள் உள. 'ஈ' என்னும் ஏவல்வினை வடிவம் 'ஈய்' என்றிருந்திருத்தல் வேண்டும்.

ஏவல் வினைகள் ஈறுபெற்றுப் பிறவினையாவன, துணைவினை பெற்றுப் பிறவினையாவன, என இருவகைய.

**போ**—போக்கு, **உண்**—ஊட்டு. இவை ஈறு பெற்றுப் பிற வினையாயின.

**தேய்**—தேய்த்துவிடு, **தீய்**—தீய்த்துவிடு, இவை துணை வினை பெற்றுப் பிறவினையாயின.

தன்வினை ஏவலே, துணைவினையும் ஈறும் பெற்று, ஆணி வேர்ச்சொல் வினைமுதனிலையிலிருந்து பக்கவேர்ச்சொல் வினை முதனிலையாகக் கிளைப்பதுண்டு.

ஆர் + உண் + து > அருந்து, தீர் + உண் + து > திருந்து,

தீர் = ஒழுங்கு, உறுதி, ம. தீர்ச்ச (உறுதி)

'அருந்து', 'திருந்து' என்னும் பக்கவேர் வினைமுதனிலைகள், இடைமெல்லெழுத்து வலிந்து, 'அருத்து' 'திருத்து' எனப் பிற வினையாம்.

தன்வினையாயும் பிறவினையாயும், வழங்கும் ஏவல்வினைகள், தனி நெடில், தனிக் குறிலாக வழக்கூன்றுமிடத்து, ஏற்கெனவே பெற்றிருந்த ஈற்றெழுத்துகளை இழந்துவிடுகின்றன.

"குற்றெழுத் தைந்தும் மொழிநிறை பிலவே"

எனத் தொல்காப்பியர் வரையறுத்தார். உயிர்நெடிலும் உயிர் மெய் நெடிலுமே மொழிநிறைபுடையனவாயின், குறில், குறிலிணை குறிலடுத்த மெய் தொடக்கத்தனவாய வினைகளெல்லாம் நெடு

முதல் வினையடிகளின் முதனிலைக் குறுக்கமாகலாம் எனத் தோற்றும். ஆயின், மொழிஞாயிறு பாவாணர் அவர்கள் தொல் காப்பியர் கருத்தை ஒவ்வாது, குற்றெழுத்துகளுள் முதல் மூன்றுன முச்சுட்டுகளை மொழி நிறைபுடையன எனக்கொண்டு ஆணிவேர்ச் சொல்லுக்கு (primary root) மூலமான முளைச் சொல்லுக்கு (sprout word) மூலமாகும் விதைச்சொல் (seed word) லாகும் தகுதியுடையன என்கிறுர். இச் சுட்டடிக் கொள் கையைத் தெளிவுறுத்த வேர்ச்சொற் கட்டுரைகளை எழுதினர். ''குற்றெழுத்தைந்தும் மொழிநிறை பிலவே'' என்னும் நூற்பா வில் உள்ள உம்மையை முற்றும்மையாகக் கொள்ளாது பாவாணர் கருத்துக்கேற்ப எச்சவும்மையாகக் கொள்ளவேண்டியுள்ளது.

ஈயென்னும் ஏவல்வினை ஆணிவேர்ச்சொல். இதற்கு 'இல்' முளைச்சொல், 'இ' விதைச்சொல், இ>இல்>(இள்>ஈள்) ஈய்>ஈ.

விதைச்சொல்லும் முளைச்சொல்லும், மொழி தோன்றிய வளர்நிலைக் காலத்திய தொன்றுமுதிர் வடிவங்களாதலின் இழைத்தல்மொழி முழைத்தல்மொழியாக வளர்ந்த நிலையிலுள்ள ஆணிவேர்ச் சொற்களையே தெளிவான இலக்கிய வழக்கு உலக வழக்கு ஆட்சிக்குரியனவாகக் கொண்டு, வினையடி, பெயரடி களாக ஏற்கிறோம். அந்நெறிப்படி ஈ, தா, வா என்பனவற்றை வினைமுதனிலைகளாகத் தொல்காப்பியரும் கொண்டார்.

*''ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே''* (தொல். சொல். 445)

ஈதல் = கொடுத்தல், பகிர்ந்து கொடுத்தல், வகுத்தல், படிப் பித்தல், படைத்தல்.

*படிப்பித்தல்—''ஈதல் இயல்பே இயம்புங் காலை''* (நன். 36)

*படைத்தல் —''எவ்வுயிர்களும் ஈந்தான்''* (கம்பரா. அகலி. 49)

கொடுத்தற் பொருளால் தனிவினையாம் தன்மையும், பகிர்ந்து கொடுத்தற் பொருளால் நெடில்வடிவு குறுகி இகரக் குறிலாய்ப் பெயர்ச் சொல்லாக்க ஈறுகி உடைமைப் பொருளுணர்த்தும் தன் மையும், வகுத்தற் பொருளால் வினையெச்சவீறுகி வினையெஞ்சி முடிந்து நிற்கும் தன்மையும், உணர்த்தும் பாங்கு ஈயென் கிள விக்குரித்தாயிற்று. தமிழின் சொல்வளம் பெருக்கும் ஈறுகி ஈகையறம் புரியும் ஈறெென இதனைக் குறிப்பிடலாம்.

இதன் முன்னிலை ஒருமை வினையடி 'ஈ' என்றிருப்பினும் ஏவலொருமை வினைவடிவம் 'ஈய்' என்பதே. தெலுங்கில் இதன்

ஏவல் வினைவடிவம் ஈய், ஈயி, இவ்வு என மருவி யொலித்தலைக் காணலாம். ஏவல்வினை முந்தியது; முன்னிலைவினைவடிவம் பிந்தியது.

சா என்னும் முன்னிலை ஒருமைவினை ஏவல் ஒருமையில் 'சாய்' என்றிருந்ததற்கான அடையாளமாக இன்றும் கன்னடத்தில் ஏவல் ஒருமை 'சாய், சாயி' என வழங்குதலைக் காணலாம்.

| முன்னிலை ஒருமை | ஏவல் ஒருமை | பிறவினை |
|---|---|---|
| ஈ | தெ. ஈய், ஈயி | ஈய்த்து, ஈயித்து, இத்து |
| | (ஈ+ஈ=ஈஇ, ஈயி, | தெ. இன்சு |
| | ஈய்>ஈ) | க. இசு |
| சா | க. சாய், சாயி, | த. சாவி |
| | த சாயு>சாவு | க. சாயிசு |
| | (கொச்சை வழக்கு) | |
| பாய் | பாய் | பாய்த்து, பய்ச்சு |
| காய் | காய் | காய்த்து, காய்ச்சு |

காய், பாய், என்பனபோன்றே ஈ, சா, என்பனவும் ஈய், சாய் என்றே வழங்கின.

ஈய்—ஈய்ந்து (தந்து)—த. வி

ஈய்த்து (தரச்செய்து)—பி. வி.

**ஈய்ந்து**

"உண்டும் தின்றும் இரப்போர்க் கீய்ந்தும் (புறம் 364.7)

"யார்க்கும் ஈய்ந்து துயிலேற் பினனே" (புறம் 317.7)

"மாவலந்த நோக்கினாய் ஊணீய்ந்தார்" (ஏலாதி 50.3)

**ஈய்த்து**

"ஊணீய்த் துறுநோய் களைந்தார் பெருஞ்செல்வம்
காணீய்த்து வாழ்வார் கலந்து" (ஏலாதி. 55)

ஈய்—ஈய—இய—இ; ஈய்—ஈ

ஈதற் பொருட்டாய 'ஈய்' ஏவல்வினையின் ஈறு கெட்டபின் ஈகார நெடில் குறிலாகியும் அப்பொருட்டாகும். வாழிய என்னும் செயவென் கிளவியின் இறுதியகரம் கெடும் (தொல். எழுத். 211) என்று தொல்காப்பியர் கூறுகிறார்.

நில்+ஈ—நிலீ (நிற்றலைத்தந்தருள், நிற்றலைச்செய்)

சென்றீ>சென்றி—(செல்லுதலைச் செய்தருள்)

அருள் கூர்ந்து இப் பணி செய்க என்று ஆங்கிலத்தில் கூறும் (please do) அன்பு கனியும் வேண்டுகோட்பாங்கை அழகுற வெளிப்படுத்தும் ஈருக ஈகார நெடில் அல்லது குறில், வினைமுற்றுகளில் வழங்குதலைக் காணலாம்.

ஆடி, பாடி என்னும் வினையெச்சங்களில் ஆடுதலைத்தந்து, பாடுதலைத்தந்து என வினையின் செயற்பாட்டை ஈதற் பொருண்மையொடு சார்த்தி இறந்தகால வினையீருகிறது.

சா+ஈ—சாவி (சாவிக்கச்செய், சாகச்செய்) என்னும் பிறவினை யேவலில், ஈகார ஈறும் ஏவற்பொருட்டாதலைக் கண்ணுறுங்கால், (ஈ+ஈ)>ஈயி>ஈய் எனப் பிறவினை யேவலும் இதே வடிவங் கொள்வது போதரும்.

ஈதலை நின்னிடத்தே கொள் என்னும் பொருளில் தன்வினை யேவலாகியும் ஈதலைப் பிறர் கொளச்செய் என்னும் பொருளில் பிறவினை யேவலாகியும் 'ஈய்' என்னும் ஏவல் வழங்கும்.

———

## இவையே சிறந்த வழிகள்

*தனி மனிதர் ஆசைகளைத் துறப்பதால் பயன் உண்டு என்பது திருவள்ளுவர் கொள்கை. ஆசைகள் பெருகுவதற்கு வழி இல்லாமல் சமுதாயத்தை அமைத்தால் பயன் உண்டு என்பது இன்றைய சான்றோர்களின் நம்பிக்கை. நான் நீ என்று முந்திக்கொண்டு பொருள் தேடிப் பிழைக்க வேண்டிய நெருக்கடி உள்ள காலம் இது. அதனால் லஞ்சமாகப் பெறும் பணத்திற்கும் குறுக்குவழிகளால் அடையும் உதவிக்கும் மதிப்பு உள்ளது. அந்த மதிப்பை அகற்றிவிட வேண்டும். மிகுதியாகப் பொருள் (பணம்) சேர்க்க இடம் இருக்கக் கூடாது. சேர்த்த பணத்திற்குப் பயனும் இருக்கக்கூடாது. நாட்டில் அப்படிப்பட்ட பொருளாதார நிலை அமைத்துவிட்டால் லஞ்ச ஆசை ஒழியும். குறுக்கு வழிகளை ஒழிக்கவும் முடியும். பிறந்தவர்கள் எல்லோருக்கும் வாழ்வு உண்டு; தொழில் செய்வோர் எல்லோர்க்கும் உணவு முதலியன உண்டு; ஆனால் தேவைக்கு ஏற்ற அளவே உண்டு; ஆசைக்கு ஏற்ற அளவு இல்லை என்று சமுதாயம் அமைந்துவிட்டால், சாதி முதலிய அரண்களைத் தேடுவோர் இருக்க மாட்டார்கள். அந்த அரண்களில் மறைந்து வாழும் ஊழல்களும் இல்லாமல் போகும். ஊழல்களை ஒழிப்பதற்கு இவையே சிறந்த வழிகள் ஆகும்.*

—டாக்டர் மு. வரதராசனர்

(மண்ணின் மதிப்பு பக். 101)

# ‘கூத்து’–இதற்கு வேர்ச்சொல் எது?

[பேராசிரியர், வீ. ப. கா. சுந்தரம்]

இவ்வாண்டு சென்னை அரசர் அண்ணுமலைமன்றில் கூடிய பண்ணாய்வுக் கூட்டத்தில் கூத்து—(நடனம்) என்பதுபற்றிய நல்ல கட்டுரை படிக்கப்பட்டது. அதன் இறுதியிலே நீண்ட கலந்துரையாடல் நடைபெற்றது. கூத்து எனும் சொல்லுக்கு வேர்ச் சொல் எது? என்று நீண்ட உரையாடல். சிலர் ‘குதி’ எனும் சொல்லினின்றும் பிறந்தது என்று கூறினர்கள். (1) குதி, குத்து, கூற்று இச் சொற்களை வேர்ச் சொல்லாகக் காட்டினர்கள். குதி எனும் சொல் நெறிமுறையாக மாறுதல் பெற்றுக் ‘கூத்து’ ஆதற்கு வழியில்லை. பெரியர் எவர் கூறினலும் சொல்லாக்க நெறிமுறைகள் இடந் தரவில்லை. (2) குத்து என்பது தாக்குதல் பொருளுடையது. (3) கூற்று கூற்றுவன் - முதலியன கூறு படுத்துவது எனும் பொருளுடையவை. எனவே முச்சொல் வழி ‘கூத்து’ எனும் சொல் பிறக்கவில்லை.

இதன் வேர்ச்சோல்லைக் காட்டும் வடிவம் கன்னட மொழியில் உள்ளது. கூது (கன்.) = நடனம். கூது > கூத்து.

கூது—(கன்.) = ஒன்று சேர்தல். கூது > ‘கூந்து’ = ஒன்று சேர்ந்த மயிர்; எ-டு: கூந்திளம் பிடி. (சூளா. நாட்டு. 19) கூந்து + அல் = கூந்தல் = ஒன்று சேர்ந்த மயிர்.

(ஒப்பு: தொகுக்கப்பட்டது—தோகை.) கூதுதல் பட்டது கூந்தல். எ-டு: “கூந்தன் மென் மயில்.” = தோகை மென்மயில்.

கூத்து = சேர்ந்து ஆடுவது. எவற்றிற்குச் சேர்ந்தாடுவது? தாளத்திற்கு, பாட்டின் நடைக்கு, பாட்டின் பொருளுக்குச் சேர்ந்து ஆடுவது—கூத்து.

கூது > கூந்து > கூத்து; கூத்து > கூத்தன்; கூத்தி; கூத்தாடுதல். கூத்தாட்டு. கன்னடத்தில் ‘கூது’ என்னும் வடிவமுள்ளது. அது கூத்து எனப் பொருள்படுவது. எனவே கூது எனும் பண்டைத் திராவிட வேர்ச்சொல் வடிவமே கூத்து என்பதற்கு வேர்ச் சொல். கூது எனும் வேர்க்கு இணைதல், சேர்தல் எனும் பொருண்மை. இப் பொருண்மையில் கூது எனும் சொல்—‘கூந்து, கூந்தல், கூத்து’ எனும் சொற்களாக, நெறி முறையாக மூக்கொலியும் வல்லொலியும் இடையில் பெற்று விடாது அடிப்படைப் பொருண்மை பூண்டு கிளைத்தன எனக் கொள்ளல் வேண்டும். ‘குதி’ என்பது முதல் நீண்டால் கூத்து என ஆகிவிடமுடியாது.

கூது = இணைதல், சேர்தல்; கூத்து = தாளத்திற்கும் பாட்டிற்கும் இணைந்தாடுவது கூத்து. கூது - கூந்து(கூந்தல்)—கூத்து—இம் முச்சொல்லும் இணைதல், சேர்தல் எனும் பொருண்மையுடையன.

———

## *நுண்கலைச் செல்வர்க்கு அஞ்சலி

[பேர்த்தி பழ. கலைவாணி]

குன்றுகள் மலைகள் இடையினிலே
குன்று ஒளிதரும் கதிரவனைக்
கண்டு மலரும் தாமரைபோல்
சாத்தன் குளத்தில் தோன்றியவர்
நாட்டின் நலத்தை நாடியவர்
நாளும் திராவிடர் இயக்கத்தில்
தந்தை பெரியார் தோழருமாய்
முந்திப் பணிபல ஆற்றியவர்
இசையின் நுணுக்கம் அறிந்தவராய்
இயற்கலை அனைத்தும் தெரிந்திட்டார்
கப்பற் கலையினைத் தொகுத்தவராய்க்
கலைஞர் கருத்துரை பெற்றிட்டார்
மாணவ ருலகம் மாண்புறவே
மாண்புறு நூல்கள் தந்திட்டார்
'நுண்கலைச் செல்வர்' எனும் பட்டம்
பெற்றுப் பெருமை எய்திட்டார்
கற்றவர் போற்ற வாழ்ந்திட்டார்
அன்பால் எவரையும் அணைத்திட்டார்
அலைகடல் கடந்தே சென்றுவந்தார்
கலைதரும் காம ராசர்கலைக்
கழகம் நடத்திய விழாவினிலே
காத்திருந் தெந்தன் தாத்தாவைக்
காலனும் கவர்ந்து சென்றிட்டான்
அன்புத் தாத்தா இராகவனர்
இறையடி சேர்ந்தே இன்றோடு
ஓராண்டும் ஓடி மறைந்ததுவே
அன்னவர் இன்னுயிர் அமைதியிலே
அமைக வென்றே இறைஞ்சுகிறேன்.

---

* நுண்கலைச் செல்வர் அ. இராகவன் அவர்கள் மறைந்து ஓராண்டு கழிந்ததை முன்னிட்டு, அவர்தம் பேர்த்தி எழுதிய பாடல்.

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

**[க. சி. கமலையா]**

(பரல் ரு, உஉசஆம் பக்கத் தொடர்ச்சி)

காவடிச்சிந்தின் மூன்ருவது பாடல் சிவஞானபுரத்தின் வளம் உரைக்கிறது. சிவஞானபுரம் இராமநாதபுரத்தின் ஒரு பகுதியாகும். அங்கு முருகக் கடவுளுக்கு அமைக்கப்பட்ட கோயில் பாண்டித்துரைத் தேவரின் பாட்டஞரான சிவஞானத் தேவரின் நினைவாக அமைக்கப்பெற்றது.[1] இவர் பொன்னுச்சாமித்தேவரின் இளவல் முத்துராமலிங்க சேதுபதியின் தந்தையுமாவார். 'முத்து ராமலிங்க சேதுபதி' என்ற பெயரைக் கொண்டு மூன்று சேதுபதிகளிருந்தார்கள். முதலாம் முத்துராமலிங்க சேதுபதி கடைசியாகச் சுதந்திர மன்னராய் மறவர்நாட்டை யாண்டவர். (1760—1772, 1780—1794). இராமேசுவரம் கோயிலின் சொக்கட்டான் மண்டபத்தைக் கட்டியவர் இவரே. ஆதி சிதம்பரம் என்று சொல்லப்படும் உத்தரகோச மங்கையின் கோயிலைப் பெரிதாக்கிக் கோபுரத்தைக் கட்டியவரும் இவரே. அக் கோயிலின் 'அர்த்த மண்டபம்' 'அந்தரால மண்டபம்', 'மகா மண்டபம்' வெகு காலத்துக்கு முன்னரே எழுந்தன. விசயரகுநாதமண்டபம், விசயரகுநாதச் சத்திரம் ஆகியவை உட்படப் பல திருப்பணிகளைச் செய்தவர் திருமலை சேதுபதி என்ற இரகுநாத சேதுபதி (1645—1670). முத்துவிசய ரகுநாத சேதுபதி செய்த திருப்பணிகள் உண்டு; (1728—34). முத்துத் திருவாய் நாச்சியார் அங்குச் சபாபதி கோயிலைக் காட்டினர்.[2] இரண்டாம் முத்துராமலிங்க சேதுபதி இராணி பர்வதவர்த்தனி நாச்சியாரால் (1845-1868) சுவீகாரமெடுக்கப்பட்டுச் சேதுபதியானவர். இராமநாதபுரம் குறுநிலக் கிழாராக இருந்த காலம். இரண்டாம் முத்துராமலிங்க சேதுபதி (1868—1873) தமிழில் புலமையுள்ளவர். இசையறிவு மிக்கவர். பன்மொழிப் புலவர். வள்ளி மணமாலை என்ற நூல் இவர் இயற்றியதாகும்.

வள்ளிக்கும் முருகனுக்கும் இருப்பிடம் எது?

---

1. *மு. இராகவையங்கார்: செந்தமிழ் வளர்த்த தேவர்கள்.*

2. Mackenzie Manuscripts. Vol. I. No. 25. Section 1, Editor. T. V. Mahalingam, University of Madras. 1972.

"அண்டருலகும் புவியு மாறுபடை வீடும்பல்
விண்டு மென்பா மாலையினு மெய்யன்புத்—தொண்டர்
உரமும் பரவுபைங்கா வோங்கு சிவஞான
புரமு மிவர்க ளிருப்பு"

என்று பாடுகிறார் சேதுபதி.

"இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்
மாலிருஞ் சோலை என்னும்
பொருப்பிடம் மாயனுக்கு என்பர் நல்லோர்
அவை தம்மொடும் வந்து
இருப்பிடம் மாயன் இராமாநுசன்
மனத்து இன்று அவன் வந்து
இருப்பிடம் என்றன் இதயத்துள்ளே
தனக்கு இன்புறவே"

என்ற திருவரங்கத்தமுதனாரின் இராமாநுச நூற்றந்தாதிப் பாடலை நினைவூட்டுகிறது.

தனிப் பாடற்றிரட்டில் இரண்டாம் முத்துராமலிங்க சேதுபதியின் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. விவேகானந்தரால் 'ராஜரிஷி' என்று புகழப்பட்ட பாற்கர சேதுபதியின் தந்தையுமாவார். பாற்கர சேதுபதியின் திருமகனார் மூன்றும் முத்துராமலிங்க சேதுபதி. இராசராசேசுவர சேதுபதி என்ற பெயரும் கொண்டவர்.

இராமநாதபுரம் அரசராகிய மூன்றும் முத்துராமலிங்க சேதுபதி பாண்டித்துரைத் தேவருக்குப்பின் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவரானார். சமத்தான மகாவித்துவான் ரா. இராகவையங்காரிடம் தமிழ் பயின்றார். இரண்டாம் முத்துராமலிங்க சேதுபதி, பாற்கர சேதுபதி, மூன்றும் முத்துராமலிங்க சேதுபதி என்ற மூவருமே தமிழிற் புலமையுள்ளவர். மூன்றும் முத்துராமலிங்க சேதுபதி இராமநாதபுரம் அரண்மனையில் நடைபெறும் நவராத்திரி விழாவின்போது தமிழ்ப் புலவர்களையும் இசைவாணரையும் அழைத்துப் பெருமைப்படுத்துவதுண்டு. விரோதிகிருது வருடம் நடந்த விழாவில் காவடிச்சிந்து மெட்டில் ரா. இராகவையங்கார் வாழ்த்துக் கவியொன்று பாடினார் :

"நாதமிக்க வேலையின்கண் ராவணனுக் காகவன்று
ராமனிட்ட சேதுதனுக் கோடியான்—ராம
நாதபத்ம பாதமுடி சூடியான்

நாவலர்க்கும் வேதவந்த ணாளருக்கு மாகநல்கி
நாலுதிக்கு மேவளர்ந்த கீர்த்தியான்—மதன்
நாணியுட்க ஏர்சிறைந்த மூர்த்தியான்

சீதமிக்க சோலையெங்குந் தேனையுக்கு நாறுகின்ற
தேவையினுக் காதிபதி யாயினன்—ஒரு
தீதுமற்ற நீதிமுறை மேயினன்
தேவவர்க்க ஆலயங்கள் சேவையுற்ற பூசைநன்று
சீலமுற்று வாழவிங்கு வந்தவன்—வந்த
தீனருக்க நேக அம்பொன் றந்தவன்

சேதுமுத்து ராமலிங்க திரசுத்தன் வீரகத்தன்
தேடுகொற்ற மாதிருக்குந் தோளினன்—பகைச்
சேனைபட்டு மாறவட்ட வாளினன்
தேவதைக்கு ளேசிறந்த மூவருக்கு மாதியென்ற
தேவிதுர்க்கை கோயின்மனை வைத்தவன்—அவன்
சீறடிக்கு நேயமுள மெய்த்தவன்

ஏதமற்ற தூயசெம்பி நாடுமுற்றும் வானமழை
ஏவருக்கு மாகவெங்கும் பெய்யவே—பயிர்
ஈதியெட்டு மின்றிவளஞ் செய்யவே
ஏகபத்தி யானவன்பர்க் கேதலுற்ற நீலகண்டி
ஈடெடுப்பி லாதபத கஞ்சமே—வினைத்
தீனமற்றி லங்குமென்றன் னெஞ்சமே.''

இராசராசேசுவர முத்துராமலிங்க சேதுபதி பாடுந்திறனும் படைத்திருந்தார். திருக்குற்ருலச் சாரல்பற்றிய அவருடைய வெண்பா பின்வருமாறு :

''செஞ்சுடராம் மேனிச் சிவனுடம்பு தான்குளிர
மஞ்சார் மலைக்குமரி வவ்வுதல்போல்—மிஞ்சும்
சமணிமுதற் பன்மரங்கள் சாருங்குற் ருலம்
ரமணிக்க வந்ததுசா ரல்.''

திருப்புல்லாணி ஆழ்வார் மங்களாசாசனம் செய்த திருப்பதியாகும். சேதுப்பாதை மணற்பாங்கான வழியாகும். சீதையை மீட்கச் சென்ற இராமபிரான் அவ்வழி நடந்து என்ன துன்பமெல்லாம் பட்டானே! புல்லைப் பரப்பிப் படுத்துக் கிடந்த இராமனுக்குத் தேர் தந்து ஊர்ந்துவரச் செய்தான் முத்துராமலிங்கேந்திரன். அருமையான பாடலொன்றில் மகாவித்துவான் இராகவையங்கார் இதைப் பாடுகிருர் :

> "சீர்தந்த தாமரைப் பூப்பட்ட போதுஞ் சிவந்துபடும்
> பார்தந்த பாதம் பரலுறைப் புண்ணவெம் பாலையெல்லாம்
> பேர்தந்து புல்லைப் பரப்பிக் கிடந்த பெருந்தகைக்குத்
> தேர்தந்த வேள்முத்து ராமலிங் கேந்த்ர செயதுங்கனே."

சேதுபதிச் செப்பேடுகளில் 'வைகை வளநாடன்' என்று சேதுபதி விருது காணப்படுகிறது. வையை என்னும் பொய்யாக் குலக்கொடி மதுரையைத் தாண்டி மறவர்நாட்டைக் கடந்து செல்லுங்கால மெலிந்துகொண்டே போகிருள். எனவே கடலை யடைவதில்லை.

> "நாரியிடப் பாகருக்கு நஞ்சளித்த பாவியென்று
> வாரியிடம் போகாத வையைதான்—தேரின்
> இடத்தும் வலத்தும் இருபுறமும் பாய
> நடத்துமாம் தண்பாண்டி நாடு."

மதுரையிலிருந்து கிழக்கு வழிகொள்கையில் மருதம் கடந்து நெய்தல் நிலத்தை யடைகிருேம். புலவர் நாட்டுவளம் பாடும் போதும் நகர்வளம் பாடும்போதும் கற்பனையில் திளைப்பர். 'பரலுறைப் புண்ண வெம்பாலை' என்பது இராமநாதபுரப் பகுதிக்கும் ஒக்கும். எனினும் சிவஞானபுர வளத்தைப் பாடும் பாண்டித் துரைத் தேவரும் கற்பனையில் திளைப்பார்.

முருகன் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் சிவஞான புரத்தின் வளத்தைச் சொல்லப் போமோ? அங்கு மானினங்கள் சாயும். ஆயிரம் நாப் படைத்த ஆதிசேடனுலும் அவ் வளத்தைச் சொல்ல முடியாது.

> "நானிலம்ப ராவுபெரு மானிளஞ்சேய் மேவுசிவ
> ஞானபுரத் தின்வளங்கள் யாவுமே—சொல்லத்
> தானடங்கு மோவனந்தன் நாவுமே."

வானை யெட்டிப்பிடிக்கும்வரை சோலை வளர்ந்து நிற்கிறது. குயில்பாடும், மயில் ஆடும். வண்டு குயிலுக்குப் பின்பாட்டுப் பாடாது சேர்ந்தே பாடும். வானளாவு சோலையென்ருல் அடர்த்திக்குச் சொல்வானேன்! 'மந்தியுமறியா மரம்பயில் அடுக்கம்' என்றுரைப்பார் நக்கீரர் திருமுருகாற்றுப்படையில்.

சிவஞானபுரத்துப் பொய்கையில் நீராடுவர் பெண்கள். அவர்களுடம்பில் செழுஞ்சாந்தின் மணம் நாறும்; அகிற்புகை யூட்டி உலர வைத்த கூந்தலன்ருே அவர்களது கற்றைக் குழல்! 'ஏலக் குழலி' என்பார் மாணிக்கவாசகர். நீராடும் அவர்கள்

உடம்பின் பரிமள களப சுகந்தம் பொய்கைக்கு மணத்தை ஊட்டுகிறது. அதுமட்டுமன்று, அக் குளத்துத் தாமரை மலரும் மணம் பெறுகின்றது. 'கமலப்பூ நாறும்'. பெண்களிடமிருந்து கடன் வாங்கி நாறுகிறது அம் மென் மலர். அன்னம் துணை யோடு வந்து அந்த வாவியில் களிக்கும். சங்கினம் சொரிகின்ற முத்துக்களை நாரைகள் கருவென்று மயங்கி அடை காக்கும். தவளைகள் குதித்து விளையாடி அவற்றை அழித்துவிடுகின்றன. கன்றை நோக்கிச் செல்லும் எருமை பாலைச் சொரிந்து பண்ணை யெல்லாம் பாலாறு ஓடுகின்றது. நிரம்பத் தண்ணீர் பாய்ந் தாலே நெல் செழித்து வளரும். பாலைப் பாய்ச்சும்போது கரும்பு போல் ஓங்கி நெற்பயிர் வளர்கின்றது. 'பள்ள நீர் பாய் மேதி' என்ற பாண்டித்துரைத் தேவரின் சொல்லாட்சி 'பள்ளத்துப் பாயும் நன்னீரனையவர்' என்ற கம்பன் வாக்கை நினை வூட்டுகிறது. பெண்கள் கொங்கை போன்ற தேன் கூட்டைக் காதலர்போல் ஈ நாடிப் பிரிந்து செல்லும். சிதைத்து நாடுவார்கட்கு அதை நல்கும் நல்லெண்ணம் கொண்ட மந்தி, மயிலை யூர்தியாகக்கொண்ட சிவஞானபுரத்து முருகன் கோயிற் கோபுரங்கள் வானவர் வந்து வணங்க அயன் சமைத்த ஏணியாகும். சிவஞானபுரத்து மந்தி மதி மந்தியாகும். மானி டவர் பருகத் தேன்கூட்டை மட்டும் சிதைக்கவில்லை. மந்தி கொப்புக்குக் கொப்புத் தாவி முருகப் பெருமான் திருவடிகளில் விழுமாறு பூக்களைச் சொரியும். தேவருலகக் கற்பகப் பூங்காவரை தாவிச் சென்றன்றோ மந்தி மலர்களைச் சொரிகின்றது! அம் மந்தி பிறவிப் பெருங்கடலையும் நீந்திக் கரை சேர்கின்றது. சிவஞானபுரத்தின் வளம்பாடும் காவடிச்சிந்து பாடி மகிழத்தக்க தாகும் :

"நானிலம்ப ராவுபெரு மானிளஞ்சேய் மேவுசிவ
ஞானபுரத் தின்வளங்கள் யாவுமே—சொல்லத்
தானடங்கு மோவனந்தன் நாவுமே.

வானளாவு சோலையெங்கும் கானமேவு கோகிலங்கள்
வண்டினிசை யோடிசைந்து பாடுமே—அது
கண்டுமஞ்ஞை தோகைவிரித் தாடுமே.

கந்தமேவுங் கோதைமாதர் வந்துதோயும் பொய்கை சேரும்
கஞ்சமலர் காவிபரி மளிக்குமே—அதில்
துஞ்சுமன்னம் பேடையோடுங் களிக்குமே.

நந்துகள்த வழ்ந்துவாரி சந்தனிற்சொ ரிந்தமுத்தை
நாரைகள்க ருவென்றடை காக்குமே—செழுந்
தேரைகள்கு தித்தகலப் போக்குமே.

பள்ளநீர்பாய் மேதிகன்றை யுள்ளியேகும் போதுசோரும்
பாலின் வெள்ளம் பண்ணைதோறுந் தேங்குமே—செழுஞ்
சாலிகன்னல் போலவளர்ந் தோங்குமே.

உள்ளியேநல் கார்தனத்தைக் கொள்ளைகொண்டு [வார்கள்போல் ௬
ஓடவேதேன் கூடுகீறிச் சிந்தியே—தேனை
நாடுவார்தங் கட்குநல்கும் மந்தியே.

வாவுமஞ்ஞை யூர்தியார்பொற் கோவில்முன்சேர் கோபுரங்கள்
வானவர்கள் வந்துநாளும் பேணியே—செல்லத்
தானயன்ச மைத்தளித்த வணியே.

மேவுமந்தி தாவிவிண்ணோர் காவில் மன்னும் பூவினைச்செவ்
வேளுபயத் தாளில்விழத் தூற்றுமே—கடுங்
கோளுறுஞ்சென் மத்தொடரை மாற்றுமே.''

(தொடரும்)

———

## நல்ல நாள்

நாட்டை, மொழியை, மக்களை, சமூகத்தைச் சீர்திருத்த எண்ணி மேடை ஏறுகிற ஒவ்வொருவனும் முதலில் தன்னைச் சீர்திருத்திக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் அவனுடைய பேச்சில் ஒரு வன்மையும் அழுத்தமும் இருக்கும். காவியுடை உடுத்தியும் நெறிதவறி நடப்பவன், ''பக்தி நெறி பற்றி''ப் பேசினால், புலால் உண்பவன் ''குறள் நெறி'' பற்றிப் பேசினால், கோழிக் குஞ்சு சூப் குடிப்பவன் ''வள்ளலார் அருள் நெறி''பற்றிப் பேசினால் எவ்வாறிருக்கும்? அப் பேச்சுக்களில் எடையே இராது. மக்கள் அவனுடைய பேச்சை மட்டுமல்ல, அவனையும் வெறுத்து விடுவர். தன்னைச் சீர்திருத்திக்கொள்வது என்பது எல்லோராலும் முடியக்கூடியதன்று. சீர்திருத்திக் கொள்ள முடியாததும் தவறன்று. இந்த நிலையில் அவன் பிறரைச் சீர்திருத்த எண்ணி மேடை ஏறும்போதுதான் அவன் தவறு செய்தவனாகிறான். அத்தகையோர் சிறிது நேரம் ஆற அமர இருந்து, ''என்னுடைய அறிவும் ஆற்றலும் பேச்சும் எனக்கே பயன்படாதபோது பிறருக்கு எவ்வாறு பயன்படப் போகிறது'' என எண்ணிப் பார்ப்பது நல்லது. நாடும், மொழியும், மக்களும் சமயமும், சமூகமும், எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கின்ற ஒன்று தன்னைச் சீர்திருத்திக் கொண்டவன் மேடை ஏறுகிற நல்ல நாள் ஒன்றையே.

—முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை]

## 6. LUMP SUM

"தொகை கொடுத்தால் பகை நீங்கும்" என்னும் புதிய மொழி இன்று ஏற்பட்டுவருகின்றது. கடும் பகைவர்கள்கூட, தொகை பெற்றவுடன், கட்டியணைத்துக்கொள்ளும் கெட்டி நண்பர்களாக மாறிவிடுவதைக் காண்கிறோம். ஆணும் பெண்ணும் சமம் என்பதை இந்தத் தொகையின் கதை தொகுத்துக் கூறும். ஆடவரையும் பெண்டிரையும் ஒருங்கே கவரும் சிறப்பு இந்தத் தொகைக்குத்தான் உள்ளது.

"பணம்" என்று சொன்னால் பிணமும் வாயைத் திறக்குமாம். Money purseஐச் சிலர் "பணப் பை" என்று குறிப்பிடுகின்றார்கள். Money purse சிறியது, அழகியது. சிறிது, அழகு என்னும் இரண்டு பொருள்களையும் ஒருங்கே தரவல்ல சொல்தான் "மணி" என்பது. சிறிய பை, மணியான பை, அதுதான் "மணிப் பை." "மணி" என்னும் சொல்லோடு "பை" என்னும் சொல் அழகுற ஒட்டிக்கொள்வதைக் காண்கின்றோம். 'மணி" என்னும் சொல்லை அடிப்படையாகக் கொண்டு மணியான மொழிபெயர்ப்புகளையெல்லாம் செய்ய இயலுமே!

Sum என்றால் தொகை. Amount என்றாலும் தொகை. இரண்டையுமே "கூட்டுத் தொகை" என்றும் குறிப்பிடுகின்றோம். அகராதிகளும் அழகாகக் குழப்பிவிடுகின்றன! இந்தக் குழப்பத்தைத் தவிர்க்க, Sum என்றால் "தொகை" என்றும் Amount என்றால் "கூட்டுத் தொகை" என்றும் கொண்டாலென்ன ?

Total sum என்று வருவதாக வைத்துக்கொண்டால், "மொத்தத் தொகை" என்றுதான் எழுதுவோம். ஆனால், இதே மொழிபெயர்ப்பை Lump sum என்பதற்கும் பலர் தவறாகப் பயன்படுத்தி வருவதைக் காணலாம்.

Lump என்றால் ஒரு கட்டி, "மொத்தை" என்று சொல்வார்கள். "ஏன் நீ இப்படி அலைகின்றாய் ? அவர் என்ன மொத்தையா கொடுக்கப் போகின்றார் ?" என்னும் உரையை உலக வழக்கில் அடிக்கடி கேட்கலாம். மொத்தமாகக் கிடைக்கும் தொகை அல்லது பொருள்தான் "மொத்தை".

திரட்டுப் பால் மிகவும் தித்திப்பாக இருக்கும். தமிழ்ச் சொற்களும் திரட்டுப் பால்போலவே இனிக்கின்றமை, ஓசைநயம் அறிந்தோர் உணர்ந்து மகிழ்வார்கள். திரட்டிய தொகை ஆங்கிலத்தில் அமைந்துள்ள வகையைக் கருதிப் பார்க்க வேண்டும்.

சட்டமொழி ஆணையம் Consolidated Fund என்னும் தொடரைத் "திரள் நிதியம்" என்று மொழிபெயர்த்துள்ளது. உண்ணத் தெவிட்டாத தெள்ளமுதாக இஃது இனிக்கின்றதல்லவா?

Lump sum என்னும் தொடருக்கு ஏற்ற மொழிபெயர்ப்பை நாம் மிகவும் நெருங்கி வந்துவிட்டோம். "வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்தாற் போல" என்பது ஒரு பழமொழி. "இந்தப் பெண் உருண்டு திரண்டு வருவதற்குள், ஐயா சிவலோகப் பதவிக்குச் சென்றுவிடுவார்" என்பது இன்னொரு பழமொழி. உருண்டு திரண்டு வருதல்தான் திரட்சி. திரட்சியைத் திரண்ட வடிவு அல்லது திரண்ட தன்மை அல்லது உருண்டை என்று கூறலாம். வறட்சிநிலையை விரட்டியடிப்பது திரட்சிநிலையாகும்! தமிழ்மொழியின் வரலாற்றில் வறட்சிநிலை என்றுமே கிடையாது.

நாலடியார் வழங்கும் சான்றினைப் பார்ப்போம்:

"வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை;
அளந்தன போகம் அவரவ ராற்றான்;
விளங்காய் திரட்டினார் இல்லை, களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்."

வளமாக வாழவிரும்பாதார் யாருமே இல்லை! ஆனால், இன்ப நுகர்வு, அவரவர் வினையின்படியேதான் கிட்டும்! விளங்காயை உருண்டையாகத் திரட்டி அமைத்தவர் யாருமே இல்லை! களம் பழத்தைக் கருமையாகச் செய்தவரும் யாருமே இல்லை!

விளாம் பழத்தினுள்ளே இனிப்பு மணிகளை யாரோ திரட்டி வைத்துள்ளார்கள்! திரட்டப்படாமல் இயல்பாகவே அமைவதும் திரட்சிதான். இனிப்பு மொழிபெயர்ப்பு இப்போது தெரிகிறது.

Lump sum = திரட்சித் தொகை.

———

## ஒரிய மொழியில்
## தனிமனிதர் தொகுக்கும் கலைக்களஞ்சியம்

தனிமனிதர் ஒருவர் அரிய பணிசெய்தால் 'ஒரு பல்கலைக் கழகம் செய்யவேண்டிய பணியை இவர் தனியாகச் செய்து முடித்துள்ளார்' என்று பாராட்டுவதுண்டு. இப் பாராட்டு அண்மைக் காலத்தில் பொருத்தமில்லாதவர்களைப் பாராட்டுவதற்குக்கூடப் பயன்படுத்தப்பட்டு அதன் சிறப்புப் பொருளை இழந்துவிட்டது. ஆனால் இக் கூற்றுக்கே இலக்கணமாக ஒருவர் திகழ்கிறார் என்றால் அஃது ஒரிய (oriya) மொழிப் பேரறிஞர் திரு. கனுகோ அவர்கள் தாம். அப்படி அவர் என்ன முடித்திருக்கிறார்! எழுபத்தைந்து தொகுதிகள் கொண்ட ஒரியமொழிக் கலைக்களஞ்சியத்தை அவர் தன்னந்தனியாக உருவாக்கி வருகிறார். 30 தொகுதிகள் வெளி வந்துவிட்டன. எஞ்சிய 45 தொகுதிகள் அச்சிட ஆயத்தமாக உள்ளன. எந்த நல்ல செயலுக்கும் இடையூறு இருக்குமன்றோ? பொருளில்லாக் காரணத்தால் அச்சுப்பணி தடைப்பட்டுள்ளது.

இவ்வளவு அரிய செயலுக்கு மைய அரசும், மாநில அரசும் உதவ முன்வருமே! அதுதான் இல்லை. ஒருவேளை ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்களுக்கு இதுபற்றித் தெரியாமலிருக்குமோ, எனில், அவ்வாறில்லை. ஆளுநர்கள் வந்து பார்வையிட்டுள்ளனர். அமைச்சர் பெருமக்கள் வருகை தருகின்றனர்; வாயாரப் புகழ்கின்றனர். ஆனால் அத்துடன் நின்றுவிடுகின்றனர். ஒருவேளை அவர் ஊர்பெயர் தெரியாதவராக இருப்பாரோ? எனில், அப்படியுமில்லை. நம்நாட்டுத் தந்தையான காந்தியடிகளின் நெருங்கிய நண்பர்களுள் ஒருவர். இந்தியாவில் ஆக்கப்பணிகள் பெறும் ஊக்கம் இவ்வளவுதான்!

திரு. பினோத் கனுகோ விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டிருந்த போது காந்தியடிகள் குமுகாயத்தில் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களுக்கு எதையாவது செய்யுமாறு அவரைத் தூண்டினார். அதை மனத்தில் கொண்டுதான் கனுகோ ஒரியா மொழியில் கலைக்களஞ்சியத்தைத் தொகுக்கத் தொடங்கினார். அரசு உதவியின்றி 10 இலட்ச ரூபாய் செலவில் 30 தொகுதிகளைத் தாமே வெளியிட்டுவிட்டார். 1912இல் பிறந்த கனுகோ 18 வயதிலே விடுதலைப் போரில் ஈடுபட்டுச் சிறை சென்றவர். 1942இல் வெள்ளையனே வெளியேறு என்ற போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறைவைக்கப் பெற்றபோது ஒருநாளைக்கு 16 மணிநேரம் படித்தார். அப்போதே அவருக்குக் கலைக்களஞ்சியத்தை உருவாக்கும் எண்ணம் கருக் கொண்டது. ஆனால் 1954இல்தான் கலைக்களஞ்சியப் பணியைத் தொடங்கினார். 75 தொகுதிகளையும் 25 இலட்சரூபாய்ச் செலவில்

உருவாக்கத் திட்டமிட்டுள்ளார். இதுவரை உதவிசெய்யாத அரசு இனியேனும், எஞ்சிய தொகுதிகளை வெளியிடுதற்கு உதவி செய்ய முன்வருமோ எனில், அப்படியுமில்லையாம். இக் கலைக் களஞ்சியத்தில் 15,000 பொருள்களைப்பற்றிய குறிப்புகள் உள்ளன வாம். ஒரிய மொழியில் 'ஞானமண்டல்' என்ற இக் கலைக்களஞ் சியத்தைத்தவிர வேறு அரசோ, அல்லது பல்கலைக்கழகமோ வேறு கலைக்களஞ்சியத்தை வெளியிடத் திட்டமிடவில்லை.

இக் கலைக்களஞ்சியத்தை உருவாக்க 20,000 கோப்புகளைத் தொகுத்துள்ளார். 30 ஆண்டுகளாக இவற்றைத் தொகுத்து வருவதால் கோப்பு மேலுறைகளும் தாளும் பழுப்படைந்துள்ளன. மேலுறைகளை மட்டும் புதிதாக்க ரூ. 12,000 தேவையாம்.

மேலும் இவர் இக் கலைக்களஞ்சியத்தைத் தவிர இளைஞர் களிடையே அறிவியல் அறிவைப் பரப்புவதற்காக 365 நாட்களுக்கு 365 புத்தகங்களை உருவாக்கி வெளியிட்டுள்ளார்.

'விடுதலைப்போராட்டத்தில் ஒரிசா மாநிலத்தின் பங்கை' விவரிக்கும் வரலாற்றை மூன்று தொகுதிகளாக எழுதி முடித் துள்ளார். இதனை எழுத 2,500க்கு மேற்பட்ட விடுதலைப் போராட்ட வீரர்களைச் சந்தித்துப் பேசியுள்ளார்.

எழுபது ஆண்டான இந்நிலையிலும் திரு. கனுகோ ஒரு நாளைக்கு நான்குமணி நேரமே உறங்குகின்றார். நாள்தோறும் எழுந்தவுடன் நாளிதழ்கள் அனைத்தையும் படித்துத் தேவையான வற்றை வெட்டிக் கோப்புகளில் சேர்ப்பார். இப்பணியில் அவர்தம் மூன்று ஆண்மக்களும் அவருக்கு உதவிசெய்கின்றனர். அவர்தம் பணிமுடிய இறைவன் போதிய பொருளும் நீண்ட ஆயுளும் வழங்குவானாக!

———

**ஆசிரியருக்குக் கடிதம்:**

## தமிழும் வானொலியும்

*தமிழ்நாட்டு வானொலி நிலையங்கள் தமிழ் வளர்ச்சிக்கும், தமிழ்ப் பண்பாட்டு வளர்ச்சிக்கும் உதவுகின்றன வென்று உரைக்கவியலாது. (இலங்கை) ஈழநாட்டு வானொலி நிலையங்கள் தமிழைப் பயன்படுத்தும் அளவுகூடத் தமிழக நிலையங்கள் பயன்படுத்துவது இல்லை. பல தமிழ்ச் சொற்களைப் பிழைபட வழங்குகின்றனர் வானொலி நிலையத்தார். அதுபற்றிச் சென்னை வானொலி நிலையச் செய்தி ஆசிரியர்க்கும், தில்லி நிலைய இயக்குநர்க்கும் எழுதினேன். பயனில்லை. இன்றும் அவ்வாறே வழங்கப்படுகின்றன.*

*பிழைபட வழங்கும் சொற்களில் சில வருமாறு: எழ்மை, அருகாமை, மானுவாரி, வாசிப்பது.*

ஏழ்மை என்றால் 'ஏழு' என்றுதான் பொருள். அதனை ஏழைமை என்றே பலுக்க வேண்டும். ஏழைத்தன்மை எனப் பொருள்படும்.

அருகாமை எனின் தொலைவு, அருகில் இல்லாமை எனப் பொருளாம். ஆனால், அண்மையில் என்னும் பொருளில் அச்சொல் பயன்படுத்தப் படுகிறது. ஆயின், அருகில் எனப் பலுக்கல் முறையாகும். அருகாமையிலுள்ள என்றே சொல்கின்றனர்.

மானாவாரி என்றொரு சொல் வானொலி நிலையத்தார் வாயில்பட்டு அலைக்கழிக்கப்படுகிறது. அதன் உண்மை வடிவம் வானவாரி என்பதே. மானாவாரி என்றால் பாட்டன் கதவு, பாட்டன் வருவாய் எனப் பொருளாம்.

"வாசிப்பது செல்வராசு" என்று செய்தி வாசிப்பவர் சொல்கிறார். வாசிப்பது என்றால் "வாசிக்கிற அது" எனப் பொருள் கொள்ளல் சாலும். வாசிப்பது பெயரெச்சமாயினும் அஃறிணைப் பெயரைக் கொண்டே முடியும். எனவே, வாசிப்பது பூனை, நாய், கிளி என்று கூறின் பொருந்தும். வாசிப்பது 'செயலட்சுமி' என்பது பொருந்தாது.

ஈழநாட்டு வானொலி நிலையத்தார் இன்றும் வாசிப்பவர் என்றே சொல்கின்றனர்.

இந்த நாட்டு வானொலி நிலையத்தாரும் முன்னர் வாசிப்பவர் என்று தாம் சொல்லினர். யாரோ "அதிகம் படித்தவர்" வந்து மாற்றி, எல்லாரையும் அஃறிணையாக்கியுள்ளார்.

பலமுறை அச் சொற்கள் பிழைபட வழங்கப்படுகின்றன; சரியான முறைப்படி வழங்க வேண்டுமென்று விளக்கி யெழுதியும் செய்தியாசிரியர் திருந்திலர். தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்பவர் போலும்!

மற்றும், தமிழ்ச்சொற்களைவிட வேற்றுமொழிச் சொற்களையே மிகுதியும் பயன்படுத்துகின்றனர். தூய தமிழறிஞர்க்கு வானொலி நிலையத்தில் பேச வாய்ப்பே அளிப்பதில்லை. மணிபவள நடையினரே மதிப்புப் பெறுகின்றனர்.

தமிழ்நாட்டு வானொலி நிலையங்கள் தமிழை வளர்க்க முற்படாவிடினும் தமிழ்ச் சொற்களைக் கொல்லாமல் இருந்தாலே போதும். பயன்படுத்தும் ஒரு சில சொற்களையும் "கொச்சை"யாக்காமல் இருத்தல் நன்றாம்.

தமிழ் பேச அழைக்கப்பெறும் தமிழ்ப் பேராசிரியர் அனைவரும் பிறமொழிச் சொற்களைக் கலக்காமல் பேசக் கற்றுக்கொள்ள வேண்டுமெனத் தமிழின் சார்பில் வேண்டுகிறோம். வெல்க தமிழ்.

வி. பொ. பழனிவேலனார்
திருத்துறைப்பூண்டி-614713.

## திருவரங்கனுரைப் பற்றிய குறிப்பு

இங்கமர்ந்துள்ள

### திருவரங்கம் பிள்ளை

23—5 -1890ல் பாளையங்கோட்டையில்
வயிரமுத்துப்பிள்ளை சுந்தரத்தம்மையார்க்கு
மகனுகப் பிறந்து, 1906 முதல் 1918 முடிய
கொழும்பில் தமிழும் சைவமும் வளர்த்து,
22—9—1920ல், திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை
நிறுவி, ஆயுள் அமைச்சராயிருந்து
எண்ணற்ற அருந்தமிழ் நூல்களை
ஒப்பற்ற முறையில் பதிப்பித்து,
பாளையங்கோட்டை ஆயிரத்தம்மன்
எருமைக்கடாப் பலியை நிறுத்தி,
நீலாம்பிகை யம்மையாருடன்
இன்ப வாழ்வு வாழ்ந்து,
28—4—1944ல் சிவனடி சேர்ந்த

**செந்தமிழ்ப் புரவலர்.**

## நீலாம்பிகையாரைப் பற்றிய குறிப்பு

இங்கமர்ந்துள்ள

### நீலாம்பிகையம்மையார்

3—6—1903ல் நாகபட்டினத்தில்
மறைமலையடிகள் சௌந்தரவல்லியார்க்கு
மகளாகப் பிறந்து, சென்னை
வித்யோதயா நார்த்விக் மகளிர்
பள்ளிகளில் தமிழாசிரியராயிருந்து,
1919ல் தனித்தமிழியக்கங் கண்டு,
2—9—1927ல் திருவரங்கனுரை மணந்து
தனித்தமிழ்க் கட்டுரைகள்
வடசொற்றமிழ் அகரவரிசை
முதலிய பத்து நூல்களை இயற்றித்
தமிழும் சைவமும் வளர்த்துப்
பாளையங்கோட்டையில் வாழ்ந்து,
5—11—1945ல் மக்கள் எண்மரை விடுத்துச்
சிவனடி சேர்ந்த

**செந்தமிழ்ப் புலவர்.**

**குறிப்பு:** இந் நடுகற்கள் இரண்டும் பாளையங்கோட்டை வெள்ளைக் கோயில் தோப்பு (பொருநையாற்றங் கரையில்) 2—8—1946 காலை 9 மணிக்குப் பாளையங்கோட்டை வழக்கறிஞர் பி. டி. சுப்பையா பிள்ளை அவர்களால் நிறுத்திவைக்கப்பெற்றன.

# செய்திகளும் குறிப்புகளும்

## சிவத்திரு. அழகரடிகள் முதலாண்டு நினைவு விழா

திருக்குறள் பீடம் சிவத்திரு அழகரடிகளின் முதலாண்டு நினைவு விழா 8-3-1982 அன்று, மாம்பாக்கம் குருகுலத்தில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் நடைபெற்றது. அன்று காலை குருகுல மாணவர்களின் பாராயணத்துடன் வழிபாடு நடைபெற்றது. திரு. கொ. ஏகாம்பரம், பி. எசி. கொடியேற்றுவித்தார். குருகுலக் கவிஞர் கன்னிசாமி கொடி விளக்கம் செய்தார். பின்னர் இன்னிசைப் பாராயணம் நடைபெற்றது. அறப்பேரொளி திரு. க. முத்துலிங்கா ரெட்டியார் தலைமை ஏற்றார். திரு. ம. நாராயணசாமி பி. ஏ., பி. டி. வரவேற்புரை நிகழ்த்தினார். முத்தமிழ்க் காவலர் முனைவர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் விழா மலரை வெளியிட்டார். 'முதற் கடவுள்' என்னும் நினைவு நூலினை பெரும்புலவர் தனக்கோடி, எம். ஏ., வெளியிட்டார். திருக்குறளார் முனிசாமி, சிவகுமார் எம்.ஏ., கலைமாமணி நாரண துரைக்கண்ணன், சிலப்பொலி செல்லப்பனார், முனைவர் ஔவை நடராசன், சிறுவை மோகனசுந்தரம், சிவாஜி பேராசிரியர்கள் வே. சிவசுப்பிரமணியம், பழ முத்தப்பன், சைவப் புலவர் மா. அமிர்தலிங்கம் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். இரவு திருமுறை இன்னிசை கிருட்டிணதேவராசன் பி. காம்., பி. எல்., சேலம் செயலட்சுமி ஆகியோர் தலைமையில் நடைபெற்றது. அம்பலவாண தேசிகர் நன்றி நவின்றார்.



## பாவாணர் முதலாம் நினைவு நாள் கூட்டம்

நெய்வேலி உலகத் தமிழ்க் கழகத்தின் சார்பிலும் பாவாணர் தமிழ்க் குடும்பத்தின் சார்பிலும் 13—2—82இல் நெய்வேலி நகரியம், நகர்க்கூறு 24 கலையரங்கில் பாவாணர் முதலாம் நினைவு நாள் கூட்டம் நடைபெற்றது. புலவர் இரா. அருட்குவை தலைமை ஏற்றார். கா. தாமரைச் செல்வன், பொறி. இ. வரவேற்புரை நிகழ்த்தினார். தளபதி தி. சி. வாசகம், க. இ., கல். இ. அவர்கள் "நாங்கள் காணும் பாவாணர்" என்னும் நினைவு மலரை வெளியிட்டார். செங்கை செந்தமிழ்க் கிழார் சிறப்புரை ஆற்றினர். திருவாளர்கள் தா. அன்புவாணன், முத்தையன் ஆகியோர் உரையாற்றினர். பாவாணர் தமிழ்க் குடும்ப அறிஞர்களின் நூல்கள் காட்சிக்கும் விற்பனைக்கும் வைக்கப்பட்டிருந்தன.

## சமய இலக்கியச் சொற்பொழிவு

தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம், தென்னிந்திய தமிழ்ச் சங்கம் ஆகியவற்றின் சார்பில் 15—2—82இல் நெல்லை, சங்க இலக்கியக் கட்டிட மாடியில் கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா இளங்குமரன் அவர்கள் தலைமையில் சமய இலக்கியச் சொற்பொழிவு நடைபெற்றது. வித்துவான் பெ. சுப்பையா பாரதி அவர்கள் "தென்னாட்டின் பொன்னேடு" (திருக்குறள்) என்ற தலைப்பிலும், "இரு பொருளும் காட்டாது இது" (திருவருட் பயன்) என்ற தலைப்பிலும் சமயச் சொற்பொழிவாற்றினர்.

## அண்டார்டிகாவில் ஆய்வுப் பணி

அண்மையில், பனிப்பாறைகளடங்கிய, உலகின் தென் பகுதியாகிய அண்டார்டிகாவில் ஆய்வுப் பணிகள் நடத்தி இந்தியாவுக்குத் திரும்பிய ஆய்வுக் குழுவின் தலைவர் டாக்டர் எஸ். இஸட். காசிம் அவர்கட்குப் பம்பாயில், இந்திய மீன் வளக் கழகம், மீன் வளக் கல்விக் கழகம் ஆகியவற்றின் சார்பில் வரவேற்பளிக்கப்பட்டது. அவ் வரவேற்புக்குப் பதில் அளித்துப் பேசிய காசிம் "பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர், ஆசியா, ஆஸ்திரேலியா, ஆப்பிரிக்கா ஆகிய கடலுள் மூழ்கிய குமரிக் கண்டம் எனப்படும் பகுதியில் காணப்படும் பாறைகளும், அண்டார்டிகா பகுதியில் காணப்படும் பாறைகளும் ஒன்றுபோல் காணப்படுகின்றன" என்ற கருத்தைத் தெரிவித்தார். இவ் வாய்வுப் பணிகள் மீண்டும் தொடரும் என்றும் அவர் கூறினார்.

## வாலாசாபாத் வா. தி. மாசிலாமணி முதலியார் உயர் நிலைப்பள்ளி 66ஆம் ஆண்டு விழா

1—3—82 அன்று வாலாசாபாத் இந்துமத பாடசாலையின் 66 ஆம் ஆண்டுவிழா, உயர்நீதி மன்ற தலைமை நடுவர் பி. ஆர். கோகுலகிருட்டிணன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பாடசாலையின் செயலர் திரு. நா. ப. தணிகை அரசு அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். திருமதி விசாலாட்சி கோகுல கிருட்டிணன் மாணவர்க்குப் பரிசுகளை வழங்கினார். பத்தாயிரம் ரூபா முதற்பொருள் வைத்துச் செயலர் ஓர் அறக்கட்டளை நிறுவினார். பெருமக்கள் பலர் அறக்கட்டளைக்கு உதவினர். பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம் பாராட்டுரை வழங்கினார். காலஞ்சென்ற இராசேசுவரி வேதாசலம் அம்மையார் படத்தைத் திருமதி இராசேசுவரி துரைராஜ் திறந்து வைத்தார். தலைமை ஆசிரியர் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## தமிழ் ஆய்வரங்கம்

28—2—82 ஞாயிற்றுக் கிழமை மாலை புதுச்சேரி வணிக அவையில் தமிழ் ஆய்வரங்கத் தொடக்க விழா நிகழ்ந்தது. புலவர் சுந்தர சண்முகனார் இயற்றிய 'அம்பிகாபதி காதல் காப்பியம்' எனும் நூலைப் புலவர் இரா. திருமுருகன் எம்.ஏ., எம்.எட்., அறிமுகம் செய்வித்தார். புலவர் அரிமதி தென்னகன் தாமியற்றிய பாக்களை அரங்கேற்றினார்.

திரு. தி. ரா. அறிவு ஒளி எம்.ஏ , பி.எட்., அவர்கள் தமிழ் அறநூல்கள் ஆய்வுரை படித்தார். பேரா. ம. இலெ. தங்கப்பா எம்.ஏ., பி.எட், அவர்கள் 'மொழிபெயர்ப்பு' பற்றிய ஆய்வுரை படித்தார். அவையோர் 'வினா நேரத்தில்' ஆராய்ச்சியாளர்தம் ஆய்வுகள்மீது ஐயவினாக்களை வினவ, ஆய்வாளர் தக்க விடைகளைக் கூறினர். அமைப்பாளர் கா. வில்லவன் நன்றி கூற விழா இனிது நிறைவேறிற்று.

## கவிஞர் அரங்க சீனிவாசனார்க்கு இராசாசி விருது

கழக நூலாசிரியருள் ஒருவராகிய கவிஞர் திரு. அரங்க சீனிவாசன் அவர்கள் 1981ஆம் ஆண்டிற்குரிய இராசாசி நினைவு விருதாகிய பத்தாயிரம் வெண்பொற் காசுகளைப் (ரூ. 10,000) பெற்றார். 1975க்கும் 1980க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பெற்ற நூல்களில் சிறந்த நூலாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற தமிழ்நூலாகிய கவிஞர் அரங்க சீனிவாசன் அவர்கள் இயற்றிய "மனித தெய்வம் காந்தி காதை" என்னும் நூலுக்கு இப் பரிசு வழங்கப்பட்டிருப்பதாக இராசாசி நூற்றாண்டு விழாக் குழுவின் தலைவர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் அறிவித்துள்ளார்.



திரு. அரங்க சீனிவாசன் அவர்கள் 1972இல் இந்தியா—பாகித்தான் போர் நிகழ்ந்து அதில் இந்தியா வெற்றி பெற்றமையைக் குறித்து முதன்முதல் வங்கத்துப் பரணி என்னும் அரிய இலக்கியத்தை உருவாக்கியதும், அது கழக வழி வெளிவந்துள்ளமையும் ஈண்டு நினைவு கூரற்பாலன. விருது பெற்ற அரங்க சீனிவாசனார்க்கு எமது வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௪, ௩௦௩ஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள்
கழக ஆட்சியாளர் ரூ. 10 00

| | | |
|---|---|---|
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5-00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5 00 |
| ,, | முருக. விசாக நம்பி, சென்னை-61. | 5-00 |

———

# மதிப்புரை

## கூத்தும் சிலம்பும்

[ஆசிரியர்: டாக்டர் அறிவு நம்பி, எம்.ஏ., ஆய்வாளர், தமிழ் மற்றும் மொழிப்புலம், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம். மதுரை. கிடைக்குமிடம்: அறிவகம், 2ஆம் தெரு, திருவள்ளுவர் திருநகர், காரைக்குடி-623001. விலை: ரூ. 7.00]

திறனாய்வுகள் பலவகைப்படும். ஆய்வாளர்கள் தத்தம் அறிவு, ஆற்றல், சூழ்நிலை ஆகியவற்றுக்கேற்ப நூல்களை ஆய்வு செய்து தம்முடைய கருத்துகளை நிறுவுகின்றனர். அவ்வகையில் 'கூத்தும் சிலம்பும்' என்னும் இவ்வாய்வு நூல், ஒரு புதிய முறையில் அமைந்துள்ளது. பண்டைக் காலத்தில் தெருக் கூத்தாக நடைபெற்ற கண்ணகிக் கதையே சிலப்பதிகாரம் தோன்ற அடிப்படைக் காரணம் என்பது இவ்வாசிரியர் கூற்று. சிலப்பதிகாரத்தில் வரும் நாடக மாந்தர், கதையின் கட்டமைப்பு, அதில் இடம் பெறும் உவமைகள் இன்னபிற ஏதுக்களைக் கொண்டும், இளங்கோவடிகளின் கலைத்திறனை அவற்றோடிணைத்தும் ஏழ இயல்களில் ஆய்வினைச் செய்து தமது கருத்தினை நிலைநாட்டுகிறார் இவ்வாசிரியர். இழிவாகக் கருதப்படும் தெருக் கூத்தினையும் உயர்ந்த இலக்கியமாகக் கருதப்படும் சிலம்பினையும் ஒட்டுப்போடும் இவ்வாசிரியரின் ஆய்வு பாராட்டத்தக்கதேயாயினும் இலக்கிய அறிஞர்களின் ஆய்வுக்குரியது.

## வாழ்வில் வெற்றியடைய வழிகள்

[ஆசிரியர்: சோதிடக் கலைஞர் மாரியப்ப அடிகள், வசந்தவல்லி பப்ளிஷிங் ஏஜென்சி, 16, காளிங்கராயன் முதல் தெரு, சிமெட்டரி சாலை சென்னை-21 விலை: ரூ 25-00]

கோள்நிலை, எண்ணியல், கைரேகை, மருத்துவம், ஆன்மீகம், இவற்றை எளிதில் அறிந்துகொள்ளவும், பிறர் உதவியின்றிச் சாதகம் கணிக்கவும், பெயர் மாற்றங்கள் செய்துகொள்ளவும், நற்காரியங்களை நாமே செய்துகொள்ளவும் மற்றும் பயனுள்ள பல செய்திகள் அடங்கிய சோதிட ஆராய்ச்சி நூல். விளக்கப் படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. அனைவர் இல்லங்களிலும் இருக்க வேண்டிய நூல்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

'செந்தமிழ்ச் செல்வி' பற்றிய உரிமை விளக்கம்–1956 ஆம் ஆண்டுச் சட்டம் - விதி 8 - படிவம் 4 இல் கண்டுள்ளபடி
செப்டம்பர்—மார்ச்சு

---

1. வெளியிடும் இடம் : 261, இலிங்கிச்செட்டித் தெரு, சென்னை 1
2. வெளியீட்டு முறை : திங்களிதழ்
3. அச்சிடுவோர் பெயர் : அப்பர் அச்சகம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-1
4. வெளியீட்டாளர் பெயர் : தென்னிந்திய தமிச் சங்கம்
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-1
5. ஆசிரியர் பெயர் : திரு. இரா. முத்துக்குமாரசாமி
   இனம் : இந்தியர்
   முகவரி : 80, பிரகாசம்சாலை, சென்னை-1
6. இதழ் உரிமையாளர்கள், மூலதனத்தில் நூற்றுக்கு ஒரு விழுக் காட்டிற்கு மேற்பட்ட பங்குகளுடைய பங்காளிகள் ஆகியோரின் பெயர்களும் முகவரிகளும் :

1 திரு. T. S. இராமலிங்கம் பிள்ளை, M. A., B. L.
ஓய்வு பெற்ற சட்டத்துறைச் செயலாளர்,
கல்லத்திமுடுக்குத் தெரு, திருநெல்வேலி-6.

2. திரு. வ. சுப்பையா பிள்ளை
91, பவழக்காரத் தெரு, சென்னை-1.

3. திருமதி சு. மங்கையர்க்கரசி
91, பவழக்காரத் தெரு, சென்னை-1.

4. திரு. R. M. K. S. கோபாலகிருஷ்ண பிள்ளை
வணிகர், சாத்தான்குளம்,
(திருநெல்வேலி மாவட்டம்)

5. திரு M. K. சிவகாமிநாத பிள்ளை
C/o R. M. K. V. சன்ஸ்,
வடக்குரதவீதி, திருநெல்வேலி-6.

6. திரு. N. S. சுந்தரம், பார்-அட்-லா, (ரிசீவர்)
134, தெற்கு இராச வீதி, தூத்துக்குடி.

7 திரு மு காசிவிசுவநாதன் செட்டியார்
வங்கியார், பாகனேரி, (இராமநாதபுரம் மாவட்டம்)

8 திரு. ச. நாராயண பிள்ளை,
25, இ. வி. கே. சம்பத் சாலை, சென்னை-7.

9. திரு. பெரி. அழ. மு. நா. நாராயணன் செட்டியார்
உரிமையாளர், பாரி அச்சகம், 66, பிரகாசம் சாலை, சென்னை-1

10. திரு. மு. ஆறுமுகம்
15. பெருமாள் வடக்கு மாடத்தெரு,
பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2.

11. திருமதி க. வடிவழகி
(திரு. இரா. கலியாணசுந்தரம் மனைவி)
2, மேட்டுத் தெரு, சென்னை-1.

12. திருமதி. மு. வயிரமணி
(திரு. இரா. முத்துக்குமாரசாமி மனைவி)
2, மேட்டுத் தெரு, சென்னை-1.

13. திருமதி பழ. மீனாட்சி ஆச்சி
(திரு. S. M. பழனியப்ப செட்டியார் மனைவி)
11, ரட்லண்ட் கேட், 2-வது தெரு,
சென்னை-6.

14. திரு. S. Ct. சிதம்பரம் செட்டியார்
162, அவினாசிசாலை, கோயமுத்தூர்-1.

15. திருமதி T. S. J. தனலட்சுமி அம்மையார்
(திரு. T. S. ஜம்புலிங்கம் செட்டியார் மனைவி)
திருப்பூர் இல்லம், கோயமுத்தூர்.

16. திரு. Rm. K. Rm இராமசாமி செட்டியார், வங்கியார்,
திட்டை, (தஞ்சை மாவட்டம்)

17. திரு. இரா. கலியாணசுந்தரம், பி. எஸ்ஸி.
2, மேட்டுத்தெரு, சென்னை-1.

18. திரு. இரா, முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி, லிப்
2, மேட்டுத்தெரு, சென்னை-1.

19. திரு. மு. சுப்பையா, 2, மேட்டுத் தெரு, சென்னை-1.

மேலே தரப்பட்டுள்ள விளக்கங்கள் அனைத்தும் என்னுடைய முழு நம்பிக்கைக்கும் அறிவுக்கும் ஏற்ப உண்மையானவை என வ. சுப்பையா பிள்ளையாகிய யான் உறுதியளிக்கிறேன்.

10—3—1982 (ஒப்பம்) வ. சுப்பையா பிள்ளை
பதிப்பாளர்

அப்பர் அச்சகம், சென்னை-1.